KALKI
11.2006 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

கலைஞர் விவகாரம்... பல்டி ஏன்?



# "நான் சந்நியாசி அல்ல!"

CONTENTS

5.11.2006

# கல்கி

"விதும்மா (ஸ்ரீவித்யா) நான் பார்த்து வளர்ந்தவர். நல்ல குரல்; நன்றாக டான்ஸ் ஆடுவார். படு சுட்டிப் பெண்ணான அவர், சிறுமியாக சினிமாவில் நடிக்க ஆரம்பித்து, ஹீரோயினாகி, குணச்சித்திரக் கதாபாத்திரங்களில் நடித்து, கடைசியில் இதோ மறைந்தும் விட்டார். அவருடைய சந்தோஷங்களைப் பார்த்து நான் மகிழ்ந்திருக்கிறேன். அவருடைய துக்கங்களைப் பார்த்து மனதுக்குள்ளேயே அழுதிருக்கிறேன். அவருடைய இறுதி நாட்களில் ஆன்மிகத்தில் ஒரு பிடிப்பை ஏற்படுத்திக்கொண்டு, தனிமையில் வாழ்ந்தாலும் அவர் மனம் தளரவில்லை" என்று சொல்லும்போதே குரல் தழுதழுக்கிறது பழம்பெரும் நடிகையான



# அடக்கத்தின்

சுகுமாரிக்கு.

"அவருக்கு உடல்நலமில்லை என்று எனக்குத் தெரிந்தபோது திருவனந்தபுரத்தில் செட்டிலாகிவிட்ட அவர் வீட்டுக்குக்கூட போயிருந்தேன். பொதுவாக, அவரது உடல்நலம் பற்றி விசாரித்தேனே ஒழிய, நாகரிகம் கருதி ரொம்பத் துருவித் துருவி கேட்கவில்லை. அவரும் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாரே தவிர, தான் கேன்சரால் மிகவும் பாதிக்கப்பட்டிருப்பது குறித்து ஒரு வார்த்தை புலம்பவில்லை. வாழ்க்கையினை அதன் போக்கிலேயே ஏற்றுக்கொள்ளும் மனப் பக்குவத்தைப் பெற்றிருந்தார் விதும்மா" என்கிறார் சுகுமாரி.

சில வாரங்களுக்கு முன்பு கேரள மாநில திரை விமர்சகர்கள் அமைப்பின் சார்பில், ஸ்ரீவித்யாவுக்கு விருது வழங்கினார்கள். உடல்நலம் குன்றி இருந்தபோதிலும், ஸ்ரீவித்யா அந்த நிகழ்ச்சியில் கலந்துகொண்டு, விருதினைப் பெற்றுக்கொண்டு பேசுகையில் அவரது உரையில் தத்துவார்த்தமான சிந்தனைகள் மேலோங்கி இருந்தன. அதுவே அவர் கலந்துகொண்ட கடைசி பொது நிகழ்ச்சி.

" 'காரைக்கால் அம்மையார்' படத்தில் மிகச் சிறந்த டான்ஸரான ஸ்ரீவித்யாவும் நானும் ஜோடியாக 'சிவ-பார்வதி' நடனம் ஆடியது மறக்க முடியாத அனுபவம். அந்தக் காட்சியைப் பற்றிக் கேள்விப்பட்டதும், கே.பி.சுந்தராம்பாள் 'அந்தப் பொண்ணு பிறவி



# ஞாபகம்



டான்சர். இந்தப் பையன் எப்படிச் சமாளிப்பான்?' என்று கவலைப்பட்டார். டான்ஸ் மாஸ்டருக்குப் பதினைந்து நாள் அவகாசம் தரப்பட்டது. அவர் தினமும் என்னைக் காலை முதல் மாலை வரை பின்னி எடுத்து விடுவார். ஸ்ரீவித்யா, தினமும் என்னுடைய டான்ஸ் பயிற்சியின்போது உடனிருப்பார். ஆனால், என்னுடைய பயிற்சியில் வீணாக மூக்கை நுழைத்துத் தாம் ஒரு டான்சர் என்பதைக் காட்டிக்கொள்ள மாட்டார். 'ஷூட்டிங்கின்போது இந்தப் பதினைந்து நாளும், நானும் என் மனதுக்குள்ளேயே உங்களுடன் நடன அசைவுகளைப் பழகிக் கொண்டிருந்தேன்' என்று கடைசி நாளன்று ஸ்ரீவித்யா என்னிடம் சொன்னபோது, அவரது அடக்கம் என்னை வியப்பில் ஆழ்த்தியது" என்கிறார் நடிகர் சிவகுமார்.

ஸ்ரீவித்யாவின் சொந்த வாழ்க்கையில்

# ...றுபெயர் வித்யா!

சோகங்கள் நிறைய. ஆனால், அவற்றைப் பற்றி மற்றவர்களிடம் சொல்ல மாட்டார். அந்தச் சோகங்கள், தம் நடிப்பை பாதிக்கவும் அவர் அனுமதித்ததில்லை. சொல்லப்போனால் அவரது சோகங்களை மறக்க நடிப்பு அவருக்கு மிகவும் உதவியது. சுமார் 900 படங்களில் நடித்துள்ள ஸ்ரீவித்யா, பல மலையாளப் படங்களில் தம்முடைய அபாரமான நடிப்புத் திறமையினை வெளிப்படுத்தி இருக்கிறார். நான்கு முறை கேரள அரசின் சிறந்த நடிப்புக்கான விருது பெற்றவர். அந்த அடிப்படையில்தான் கேரள அரசு அவருக்கு அரசு மரியாதையுடன் இறுதிச் சடங்குகளை நடத்தியது.

- கௌதம்ராம்




**கல்கி**

ஒவ்வொரு இதழும் உங்கள் மேஜைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**
**ச. கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# -சரத் பேட்டி

**ராதிகா தயாரித்திருக்கும் 'தலைமகன்' சரத்குமாருக்கு நூறாவது படம். படத்தின் டைரக்டரும் சரத்குமார்தான். 'படத்துக்கு நல்ல வரவேற்பு!' என்று சரத் சொல்கிறபோது முகத்தில் சந்தோஷம். சரத்குமார் நம்மிடம் பேசியதிலிருந்து முக்கியமான சில பகுதிகள்...**

**தலைமகன் படத்தை நீங்களே டைரக்ட் செய்ய வேண்டிய அவசியம் என்ன?**

"நான் இந்தப் படத்தின் டைரக்டரானது ஒரு விபத்துதான். ஓரளவு காட்சிகள் எடுத்து முடிக்கப்பட்ட நிலையில், நான் எடுத்த முடிவு இது. இரண்டு கோடி ரூபாய் அளவுக்குச் செலவழித்தாகி விட்டது. அப்புறம் வேறு ஒருவரைப்



புதிதாக டைரக்டராக்கியிருந்தால், அவர் புதிய கதையைச் சொல்லியிருக்க வாய்ப்புண்டு. அதுவரைக்கும் எடுத்தது எல்லாம் வீணாகிவிடும். படம் தீபாவளிக்கு ரிலீஸாவது தாமதமாகிவிடும். எனவே, படத்தை நானே டைரக்ட் செய்ய முடிவு செய்தேன்."

**நடிப்பில் நூறாவது படம்; முதல் டைரக்ஷன் படம். இன்னும் நல்லதொரு கதையைத் தேர்ந்தெடுத்திருக்கலாமே?**

"ஆக்ஷன் படமாக இருப்பதுடன் சமுதாயப் பிரச்னையைத் தொட்டுக் காட்டும் படமாகவும் இருக்க வேண்டும் என்று முடிவு செய்தேன். நானே பத்திரிகையாளராக இருந்தவன்தான். வாள் முனையைவிட, பேனா முனை கூர்மையானது என்று சொல்வார்கள். இன்று உலகின் மிக முக்கியமான பிரச்னை தண்ணீர். மூன்றாம் உலகப் போரே, தண்ணீர் காரணமாகத்தான் வரும் என்றுகூடச் சொல்கிறார்கள். எனவே, பத்திரிகையாளர் கேரக்டரையும், நிலத்தடி நீர்ப் பிரச்னையையும் எடுத்துக் கொண்டேன். அந்தப் பிரச்னை கொண்ட கதை நல்ல கதைதானே!"

**டைரக்டர் என்ற முறையில் உங்களுக்கு யார் இன்ஸ்பிரேஷன்?**

"கே.எஸ்.ரவிக்குமார்தான். அவர் இயக்கி நான் நிறைய படங்களில் நடித்திருப்பதால், அவரது சுறுசுறுப்பு, திட்டமிடும் முறை, செயல் நேர்த்தி ஆகியவற்றைப் பார்த்து வியந்திருக்கிறேன். அவருடைய தாக்கம் எனக்குள் உண்டு. விரைவில் படத்தை முடித்து வெளியிட வேண்டிய சூழ்நிலையில் நான் கே.எஸ். ரவிகுமாரைப் பின்பற்றி இருக்கிறேன்."

**அரசியல் ரீதியில் உங்கள் இமேஜை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்பதற்காக இந்தப் படமா? அரசியலில் உங்கள் அல்டிமேட் நோக்கம் என்ன?**

"எனக்கு அரசியல் பின்னணி உண்டு. கம்யூனிஸ்ட் தலைவர் கே.டி.கே. தங்கமணி, தி.மு.க. முன்னாள் அமைச்சர் கே.பி.கந்தசாமி, தினத்தந்தி ஆதித்தனார் வழியில் வந்த எனக்கு, மாணவப் பருவம் முதலே, பொது வாழ்க்கையில் ஆர்வமும் அக்கறையும் உண்டு. ஜாதி, மதம், மொழி என்ற வட்டங்களுக்கு அப்பால் மக்கள் ஒற்றுமையாக வாழ வேண்டும்; சமூகத்தில் ஏற்றத் தாழ்வுகள் இருக்கக் கூடாது என்று நினைப்பவன் நான். அரசியல் மூலமாக மக்களுக்குச் சிறப்பாக சேவை செய்ய முடியும் என்று நான் திடமாக நினைக்கிறேன். அதேசமயம் சினிமாதான் எனக்குக் கடவுள் மாதிரி. அதற்குத்தான் இன்

றைய கட்டத்தில் நான் முன்னுரிமை கொடுக்க நினைக்கிறேன்."

**தமிழக முதல்வர் கலைஞருக்குக் கலை உலகம் எடுத்த விழாவில் கலந்து கொள்ளாமல், தவிர்த்துவிட்டீர்கள். நடிகர் சங்கத் தலைவரான நீங்கள் இவ்வாறு செய்யலாமா...?**

"அந்த விழாவில் கலந்துகொண்டு, முதலமைச்சரைப் புகழ்ந்து பேச எனக்கு விருப்பமில்லை. எனவே அந்த விழாவில் நானும், ராதாரவியும் கலந்து கொள்ள வில்லை. இதை நான் முன்பே கூறிவிட்டேன். அதே சமயம், ஒரு கலை உலகப் பிரச்னை என்றால், அதற்காக அரசாங்க அதிகாரிகளையோ, அமைச்சர்களையோ, அவசியமானால் முதலமைச்சரையோகூட சந்திக்க நான் தயங்கமாட்டேன்."

பிரமுகர்



**நீங்களும் உங்கள் மனைவி ராதிகாவும் ஒன்றாகத்தான் அ.தி.மு.க.வில் சேர்ந்தீர்கள். ஆனால், ஜெ. உங்கள் மனைவி மீது ஒழுங்கு நடவடிக்கை எடுத்துக் கட்சியிலிருந்து விலக்கிவிட்டாரே!**

"அது குறித்து நான் இப்போது எதுவும் சொல்ல விரும்பவில்லை."

**அண்மையில் ஒரு பத்திரிகையில் கலைஞரைக் காட்டமாகத் திட்டி**

# கலைஞர் விவகாரம்... பல்டி ஏன்?

**விட்டு, அடுத்த சில நாட்களிலேயே, 'நான் அப்படியெல்லாம் சொல்லவில்லை' என்று மறுத்து விட்டீர்களே! ஏன் இந்த பல்டி?**

"அந்தப் பேட்டி, நான் கூறியதை சரியாகப் பிரதிபலிக்கவில்லை. ஆகவே நான் பல்டி அடித்ததாகத் தோன்றுகிறது."

**- எஸ்.சந்திரமௌலி**

மருதன்

டேவைட் டெமார். இதுதான் அவன் பெயர். பிரிட்டன்வாசி. சரியான பிச்சுவா பார்ட்டி. வழிப்பறி, செயின் பறிப்பு, குடித்துவிட்டு வண்டி ஓட்டுவது, பொய் சொல்லி ஏமாற்றுவது, சிறு திருட்டு, மீடியம் திருட்டு என்று அத்தனை சுப காரியங்களையும் தவறாமல் செய்து வருபவன்.

இப்பேர்ப்பட்ட டெமார் இன்று புறாக்களுக்கு பொரி, கடலை போட்டுக் கொண்டிருக்கிறான். 'திருட்டா... அச்சச்சோ, அதெல்லாம் தப்பாச்சே!' என்று உச்சுக் கொட்டுகிறான். மொத்தத்தில்



# வன்முறையாளர்களின் கவனத்துக்கு!

சமர்த்துச் சக்கரைக்கட்டியாக மாறிவிட்டான்.

சரி, எப்படி ஏற்பட்டது இந்த மாற்றம்? 'ஓ அதுவா, ஏதோ ஒரு மாத்திரையைக் கொடுத்தாங்க. தொடர்ந்து கொஞ்ச காலம் சாப்பிட்டேன். அவ்வளவுதான், இப்போ ரொம்ப நல்ல பையனா மாறிட்டேன்.' அதெப்படி? ஒரு தக்கனூண்டு மாத்திரையால் இத்தனை பெரிய மாற்றத்தை ஏற்படுத்த முடியுமா? அமெரிக்கா, பிரிட்டன் என்று அகிலமே இப்போது அதிசயத்தோடு ஆச்சரியப்பட்டுக் கொண்டிருப்பது இதைப் பற்றித்தான்.

பெயர் ஒமேகா-3. ஒல்லி தேகம். மஞ்சள் நிறம். டாலடிக்கும் டிஸ்கோ காப்ஸ்யூல். அடிப்படையில் நான்-வெஜிடேரியன். உள்ளுக்குள் பிரதானமாக மீன் எண்ணெய்தான் நிரம்பியிருக்கும். வாஷிங்டனிலுள்ள தேசிய மருத்துவக் கழகத்தில் பரிசோதித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கண்டுபிடிக்க விரும்புவது இதைத்தான். ரப்சர் செய்யும் ஆட்களுக்கு இந்த ஒமேகா-3ஐ தொடர்ந்து கொடுத்தால், அவர்கள் நாளடைவில் சமாதானத் தூதுவர்களாக மாறிவிடுவார்களா? முயன்று பார்த்ததில் டெமார் விஷயத்தில் முதல் வெற்றி கிடைத்திருக்கிறது. உற்சாகமாக பலூன் பறக்கவிட்டு கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள் சம்பந்தப்பட்ட மருத்துவர்கள்.

ரப்சர் நபர்களுக்கும் ஒமேகா-3க்கும் என்ன சம்பந்தம்? இருக்கிறது தொட்டதுக்கெல்லாம் கத்தி, அரிவாள் தூக்கும் வெட்டுக்குத்து நபர்களின் உணவு பழக்கத்தைக் கவனித்துப் பாருங்கள் ஆரோக்கியமான உணவு வகைகளை சாப்பிடமாட்டார்கள். வைட்டமின்கள் புரோட்டீன்களை அருகே சேர்த்துக்கொள்ள மாட்டார்கள். சட்டைக்குப் பின்னால் இருப்பைச் செருகிக் கொள்வார்கள். ஆனால் இரும்புச் சத்து இருக்காது. ஆக, உணவு உட்கொள்ளும் முறைதான் பெரும்பாலான வன்முறையாளர்களை உருவாக்குகிறது.

பஸ்ஸில் தெரியாத்தனமாகக் காலை மிதித்துவிட்டால்கூட சுர்ரென்று கோபம் தலைக்கேறி, 'காச்மூச்' என்று கத்துபவர்களின் உணவு முறைக்கும், 'பரவாயில்லை தம்பி!' என்று விட்டுக் கொடுப்பவர்களின் உணவு முறைக்கும் நிறைய வித்தியாச



இருக்கிறது என்கிறார்கள் மேற்படி டாக்டர்கள். மூளையில் நடக்கும் வேதியியல் மாற்றங்களை நிர்ணயம் செய்வதில் உணவு முறைக்கு ஒரு முக்கியப் பங்குண்டு. ஓமேகா-3 ஹீரோ ஆவது இந்த இடத்தில்தான்.

மேலை நாடுகளில் வன்முறை ரொம்பவும் பிரசித்தமானது. நேஷனல் ஜியாக்ரஃபிக் பார்க்க சேனல் மாற்றியதற்காக கன்னம் பழுக்கத் தம் மனைவியை அடித்தவர்கள் அங்கே நிறையப் பேர். அதே போல், குடித்துவிட்டு அட்டகாசம் செய்பவர்களும் கொஞ்ச நஞ்சமல்ல. இது போன்ற ஆசாமிகளை அள்ளிக்கொண்டு போய் சிறையில் ரொப்புவதைவிட, இவர்களுக்கு ஓமேகா-3ஐக் கொடுத்து, நல்ல பிள்ளைகளாக மாற்றினால் நன்றாக இருக்கும். ஆனால் அது சாத்தியமா?

இதையும் பரிசோதித்துப் பார்த்துவிட்டார்கள். முப்பது மொடாக் குடிகாரர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்கு இந்த காப்ஸ்யூல்களைக் கொடுத்திருக்கிறார்கள். மூன்று வாரங்களுக்குப் பிறகு, லேசுபாசான மாற்றங்கள் தெரியத் தொடங்கின. குடிப்பதையே முற்றிலுமாக நிறுத்திவிட்டார்கள் என்று சொல்ல முடியாது. ஆனால், 'டாய்ய்ய்ய்ய்ய்!' என்று கத்தியபடி சண்டையில் இறங்கும் பழக்கம் தொலைந்து போயிருக்கிறது. போதாது?

ஓமேகா-3யைத்தான் விழுங்க வேண்டும் என்றில்லை. காரட், மொச்சைக் கொட்டை, காய்கறி, கீரை வகைகள், மீன் என்று போஷாக்கான உணவு வகைகளும் மேற்படி அதிசய மாற்றத்தை ஏற்படுத்தும் என்கிறார்கள்.

டெமாரின் கதைக்குத் திரும்பலாம். புதிதாக ஒரு போனிடெயில் கேர்ள் ஃப்ரெண்ட் கிடைத்திருக்கிறார். பெரிய அபார்ட்மெண்ட்டாகப் பார்த்து குடி புகுந்திருக்கிறார்கள். வேலை கிடைத்திருக்கிறது. கை நிறையச் சம்பளம். பிடிக்காதவர்களின் மண்டையைப் பிளக்க வேண்டும் என்று இப்போதெல்லாம் தோன்றுவதில்லையாம். 'மீன் எண்ணெய் மாத்திரையை மறக்காமல் சாப்பிடுகிறேன். எனக்கே என்னைப் பார்க்கப் புதிதாக இருக்கிறது. சந்தோஷம்' என்று பார்ப்பவர்களிடமெல்லாம் சொல்லிச் சொல்லி மாய்ந்துபோகிறார் டெமார்.

பேசாமல் எல்லோருக்கும் ஓமேகா-3 கொடுத்துவிடலாமே என்று ஒரு சாரார் ஏற்கெனவே பிரிட்டனில் யோசிக்க ஆரம்பித்துவிட்டார்கள். ஆனால் மருத்துவர்கள் அவர்களுக்கு இன்னமும் பச்சைக் கொடி காட்டவில்லை. காரணம், மேற்படி சமாசாரம் பற்றிய முழுமையான முடிவுகள் இன்னமும் வெளியிடப்படவில்லை. பரிசோதனை நிலையில்தான் இருக்கிறது. ஆகவே, இப்போதைக்கு அவசரப்பட்டு மீன் எண்ணெய்களை விழுங்க வேண்டாம் என்பது சம்பந்தப்பட்ட மருத்துவர்களின் வேண்டுகோள். ஒன்று செய்யலாம். ஆப்கனிஸ்தான், ஈராக், வடகொரியா, பாலஸ்தீனம் என்று ஏகத்துக்கு பிஸியாக இருக்கும் புஷ்ஷுக்கு ஒரு டோஸ் ஓமேகா-3 கொடுத்துப் பார்க்கலாம். மனிதர் திருந்தினால், ஓமேகா-3 ஓர் அதிசயம் என்று உலகமே ஏற்றுக் கொள்ளும். ●






ஜகி வாசுதேவ் கோவையில் ஈஷா யோகா சென்டரை ஆரம்பித்து இருபத்தைந்து வருடங்களாகின்றன. இன்று அது கிராமப் புத்துணர்வு இயக்கம், பசுமைக் கரங்கள் என்று கிளை பரப்பி நிற்கிறது. சமீபத்தில் சென்னைக்கு வந்திருந்த ஜகி வாசுதேவைச் சந்தித்தபோது, நமது கேள்விகளுக்குத் தயக்கமின்றி பதில் அளித்தார்.

**உங்களைச் சத்குரு என்கிறார்கள். ஆனால் சமூகப் பணிகளே பெரும்பாலும் உங்கள் வேலைத் திட்டமாக இருக்கின்றன. நீங்கள் ஆன்மிகவாதியா, இல்லை சமூக ஆர்வலரா?**

"அது ஆன்மிகமோ, சமூக சேவையோ - எது செய்தாலும் மனித குலத்தின் நன்மைக்காக என்ற நோக்கம் மட்டுமே அடிப்படையாக இருக்க வேண்டும். ஆனால் இந்த நோக்கம் மறக்கப்பட்டு வருகிறது. நான் மறக்கவில்லை; அப்படி மறக்காததை மக்களுக்கு நினைவுபடுத்துகிறேன். அதை ஆன்மிகம் என்கிறீர்களா? இல்லை... ஒரு மனிதனை 'உள்' நிலையில் ஆனந்தமயமாக்க முயற்சி செய்கிறேனே, அது ஆன்மிகமா? இப்போது எல்லோருக்கும் ஒரு முத்திரை குத்தி விடுவதை வாடிக்கையாக்கிக் கொண்டு விட்டீர்கள். நான் ஆன்மிகத்திலும் இல்லை; சமூக ஆர்வலரும் இல்லை. மனித குலத்துக்கு நன்மை செய்கிற சக மனிதனாகத்தான் நான் இருக்கிறேன். இந்த மனித குலத்துக்கு நன்மை செய்ய பலர் ஆவலாக இருக்கிறார்கள். அவர்கள் எண்ண ஓட்டம் 'நான்' என்ற சுயநலத்திலிருந்து தேசம், உலகம் என்று பொது நலமாக விஸ்தரித்துள்ளது. இந்த எல்லையை மேலும் விரிவுபடுத்தவே நான் முயன்று வருகிறேன். இதை ஆன்மிகம் என்று சொல்வீர்களா அல்லது சமூக நலன் என்று சொல்வீர்களா?... ஒன்றும் சொல்ல வேண்டாம்."

**யோகம், தியானம் என்று துவங்கிய நீங்கள், இப்போது கிராமப் புத்துணர்வு இயக்கம், பசுமைக் கரங்கள் என்று பணிகளை விரிவுபடுத்தியிருக்கிறீர்கள். துவக்கிய நோக்கம் பாதை மாறிவிட்டதா?**

"நோக்கம் சரியாகத்தான் போய்க் கொண்டிருக்கிறது. பூகோள ரீதியாக ஓர் இடத்தில் கவனத்தைச் செலுத்தி மாற்றத்தைக் கொண்டுவர வேண்டும் என்று நினைத்துத் தமிழ்நாட்டைத் தேர்ந்தெடுத்தோம். பல நூறு அமைப்புகள் இருந்தாலும் வேறு எங்கும் போகவில்லை. தமிழ்நாட்டில் பெரிய நகரம், நடுத்தர டவுன், பெரிய கிராமம், சிறு கிராமம் என்று ஊடுருவி, இன்று 2432 கிராமங்களில் எங்கள் அமைப்பின் பணிகள் நடந்து வருகின்றன. அங்கேயெல்லாம் ஈஷா யோகா, மக்களின் மன-வாழ்க்கை நிலையில் பெரிய மாற்றத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது. நாங்கள் ஏற்படுத்தி வரும் மாற்றத்தைப் பற்றிப் பெரிய அளவில் வெளியில் தெரியவில்லை. இப்படி சமூக, மனித குல தேவைகளை நிறைவேற்றுவதில் ஈடுபட்டு வருவதால் ஆன்மிகத்தை மறந்துவிட்டீர்களா என்று கேட்கிறார்கள். எங்கும் சுபிட்சம் நிலவினால், நான் என் ஆன்மிகப் பணியிலேயே முழுக் கவனத்தையும் செலுத்தியிருப்பேன். இங்கே வயிற்றுப் பசியோடு இருப்பவனுக்குத் தியானம் சொல்லித் தர முடியுமா? மக்களின் யதார்த்த வாழ்க்கையை மாற்றாமல் எந்த ஆன்மிகப் பணியிலும் இறங்க முடியாது. எனவே திட்டமிட்டுப் படிப்படியாகச் செல்கிறோம். பாதையில் எந்த மாற்றமும் இல்லை."

# "நான் சந்நியாசி

**உங்களைப் போல பணிகளில் ஈடு**



**பட்டு வரும் அமைப்புகள் Corporate பாணியில் மக்கள் தொடர்பு அதிகாரியை வைத்து விளம்பர வீச்சாய் அசத்துகின்றனவே! இது சரியா?**

"முதலில் நம்மீது ஒரு நம்பிக்கை உண்டாகும்படி நாம் நடந்து கொள்ள வேண்டும். இதற்கு ஒரு வழிமுறை இருக்கிறது. இருபத்தைந்து வருடங்களாக ஈஷா இருக்கிறது. ஆனால் இருபது வருடங்கள்வரை எந்த மீடியாவையும் நான் தொடர்பு கொண்டதில்லை. இப்போது அப்படியிருக்க முடியவில்லை. கிராமப் புத்துணர்வு இயக்கத்தைத் துவங்கியவுடன் மீடியாவைப் பயன்படுத்திக் கொள்வது தவிர்க்க முடியாததாகிவிட்டது. பெரிய அளவில் ஆதரவு கிடைக்காவிட்டால் இந்த இயக்கத்தைத் திட்டமிட்டபடி நடத்திச் செல்ல முடியாது."

**சமீபத்தில் முதல்வரை வைத்து பசுமைக் கரங்கள் நிகழ்ச்சியைத் துவங்கியதும் இந்த அடிப்படையில்தானா?**

"கலைஞரை நீங்கள் அரசியல் தலைவராகப் பார்க்கிறீர்கள். நாங்கள் அவரை முதலமைச்சராகப் பார்க்கிறோம். அரசியல் என்பது தேர்தலோடு முடிந்து போக வேண்டும். அதன்பின் முதலமைச்சராக வருபவர், ஜனநாயக முறையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு, மக்களுக்கு நன்மை செய்ய வருகிறார். அந்தப் பணியில் அவர் ஈடுபடும்போது அவருக்கு நாம் உதவ வேண்டும். இதை மக்களுக்குப் புரியவைக்கத்தான் அந்த நிகழ்ச்சியை முதல்வரைக் கொண்டு நடத்தினோம். கலைஞர் என்றல்ல; யார் முதல்வராக இருந்தாலும் இதே அணுகுமுறையைக் கையாளுவோம்."

**காவி அணிபவர்களின்மீது மக்களுக்கு நம்பிக்கை போய்க் கொண்டிருக்கிறபடியால்தான் நீங்கள் காவி அணிவதைத் தவிர்க்கிறீர்களா?**

"காவி என்பது சந்நியாசிகள் கட்டிக் கொள்வது. நான் சந்நியாசி அல்ல. ஏதோ சிலர் செய்த தவறுகள் காரணமாக, ஒரு தவறான அபிப்ராயம் பொதுவாக உருவாகிக் கொண்டு வருகிறது. இது பூதாகாரமாகத் தெரிய, மற்றொரு காரணம் மீடியா. பாலியல் பலாத்காரம் செய்பவன்,

# அல்ல!"

கொலை செய்பவன், வெடிகுண்டு வைப்பவன் ஆகியோரைப் பற்றித்தான் மீடியா முழுக்க எழுதறீங்க. இப்போ பிறக்கிற குழந்தைகள் இதே



சூழலில் வளர்ந்தால், 'சமூக விரோதியாக இருந்தாதான் வாழ முடியும்' என்ற எண்ணத்தில் வளர்வார்கள். எனவே மீடியா ஆக்கபூர்வமாக மாறணும். சமுதாயத்தில் எல்லா பிரிவிலும் தரம் தாழ்ந்த நிலை இருக்கும்போது, காவி கட்டும் பிரிவிலும் இருக்கிறது. ஆனால் மீடியா எல்லோருடைய முகத்திலும் கரியைப் பூச நினைக்கிறது. காவி கட்டுபவன், தான் யோக்கியன் என்று நிரூபித்துக் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறான்.''

**காஞ்சி மடத்தைப் பற்றி உங்கள் அபிப்ராயம்?**

"நான் அங்கே போனதில்லை. எனக்கு அதைப் பற்றி first hand knowledge கிடையாது. மீடியாவில் ஏதேதோ எழுதினாங்க. அப்புறம் அதைத் திடீர்னு விட்டுட்டாங்க. 'ரசம்' கிடைக்கலை போலிருக்கு. நான் ஏற்கெனவே சொன்னதுபோல் மீடியாவின் நடத்தை மாறணும். டாக்டர்கள், அரசியல்வாதிகள், நீதிபதிகள், ஆன்மிகவாதிகள், பத்திரிகையாளர்கள் ஆகியோர், தங்கள் பணியை ஒரு தொழிலாக நினைக்காமல் அர்ப்பணிப்பு உணர்வோடு தத் தமது துறையில் இருக்கணும். என்னைப் பற்றியும் மோசமா மீடியா எழுதினாங்க. என்னைப் பற்றிக்கூட அபாண்டமாக எழுதினார்கள். ஆனால், பொய்யும் ஆர்ப்பாட்டமும் நிலைத்து நிற்காது.''

**இப்போது மதங்களைப் பயன்படுத்தி, அரசியல்வாதிகள் வோட்டு அறுவடையில் இறங்குகிறார்கள். இந்த நிலையில் மத நல்லிணக்கத்துக்காக நீங்கள் பாடுபடலாமே!**

"எல்லா மதங்களைச் சேர்ந்தவர்களும் எங்கள் மையத்தில் இருக்காங்க. ஒருவருக்கொருவர் வேறுபடுத்திப் பார்க்கும் தன்மை விலகணும். 'எல்லாமே எனக்குள் ஒன்றுதான் என்று உணரத் தொடங்கினாலே வேற்றுமைகள் அடிபட்டு, நல்லிணக்கம் ஏற்படும். மதங்கள்கூட இந்த அடிப்படையில் தான் உருவாக்கப்பட்டிருக்கு. மற்ற விஷயங்களைப் போல இதையும் நாம் மறந்துவிட்டோம்.''

**ஆனால் உங்கள் தியான சென்டரில் பிரம்மாண்டமான லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்திருப்பது இந்து மதத்தின் குறியீடாகத்தானே இருக்கிறது?**

"எல்லாவற்றுக்கும் எது அடிப்படையாக இருக்கிறதோ அதைத்தான் ஈஷா என்று சொல்கிறோம். அது உருவமில்லாத நிலையில் ஈஷா; உருவம் கொடுத்தால் ஈஸ்வரன். நமக்கு இன்னமும் உருவமில்லாத தன்மையைப் புரிஞ்சுக்கிற பக்குவம் முழுதாக வரவில்லை. எனவே உருவ வெளிப்பாடுதான் வழக்கமாகிவிட்டது. உருவைத் தாண்டி அதற்கு அப்பால் பார்க்கணும். உருவமில்லாத ஈஷாவை புரிஞ்சுக்கிறது, கிரகிக்கிறதுதான் நமது நோக்கம். ஆனா அந்தப் பக்குவம் முழுதாக மக்களிடம் வராததால்தான் இந்த ஏற்பாடு! இதற்கும் மதத்துக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இஸ்லாமியர்கள், கிறித்துவர்கள் என்று நிறைய பேர் சென்டருக்கு வருகிறார்கள்.''

**நீங்கள் எதிர்காலத்தில் நேரிடையாக அரசியலுக்கு வருவீர்களா, அல்லது தேர்தலின்போது 'இவரை ஆதரியுங்கள்' என்று யாரையேனும் அடையாளம் காட்டுவீர்களா?**

''மதவாதிகள் சிலர் 'இவருக்கு வோட்டுப் போடு, அவருக்கு வோட்டுப் போடு' என்று ஜனநாயகத்தைக் கொலை செய்கிறார்கள். ஒரு மனிதன் யாருக்கு வோட்டுப் போடணும் என்று தானே தீர்மானிக்க வேண்டும். நாம் அரசியலுக்கு வரமாட்டோம். ஆனால் மக்கள் இந்த விஷயத்தில் முடிவெடுக்கும் திறனை வளர்க்க உதவுவோம்.''

தியானம் குறித்த ஜக்கியின் வாதங்கள் அடுத்த வாரம்...

**- ப்ரியன்**

அட்டை மற்றும் படங்கள் : **ஸ்ரீஹரி**

ஸ்ரீ ராமஜெயம்



# ஸ்ரீ மாருதி டிராவல்ஸ்

(நாம சங்கீர்த்தனத்துடன் ஆன்மீக அன்பர்களை அழைத்துச் செல்லும் யாத்திரை, சுற்றுலா குழு அமைப்பாளர்கள்)

குறிப்பு: விலாசம் மாற்றப்பட்டுள்ளது. Sri Maruthi Travels, No. 2A - II Floor, Mathura Enclave, New. No.123, Perambur High Road, Perambur. Chennai - 600 011.

தொலைபேசி போன்: 25511786 மொபைல் : 9444035876

① 03.01.07 முதல் 08.01.07 வரை அஹோபிலம், மந்திராலயம், ஸ்ரீசைலம் 2X2 டிலக்ஸ் பஸ் (35 இருக்கைகள்) பஸ் கட்டணம், சாப்பாடு, இரவு தங்குதல் உட்பட நபர் ஒருவருக்கு ரூ. 1850/-

② 21.01.07 முதல் 04.02.07 வரை சப்த ஜோதிர்லிங்க, யாத்திரை (மஹாராஷ்டிரா மாநிலம் - உஜ்ஜெயின்) மற்றும் ஷீரடி, பண்டரிபுரம், சனி சிங்கனாப்பூர் கொல்லாப்பூர் மஹாலக்ஷ்மி, பஞ்சவடி ஆகியவை சென்னை - மும்பாய் - உஜ்ஜெயின் - சென்னை, இரயில், பயணம். இதர இடங்கள் 2X2 Deluxe Bus (35 இருக்கைகள்) பஸ் மூலமாக யாத்திரை. இரயில், பஸ், சாப்பாடு, இரவு தங்குவதற்கான பொதுக்கூடம் உட்பட கட்டணம் ரூ. 7,650/-

③ 11.02.07 முதல் 16.02.07 வரை சோழநாடு- திவ்யதேசங்கள் (40 வைஷ்ணவ கோயில்கள் மட்டும்) யாத்திரை 2X2 டிலக்ஸ் பஸ் மூலமாக பஸ் கட்டணம், சாப்பாடு, இரவு தங்குதல் உட்பட கட்டணம் ரூ. 2,600/-

④ 21.02.07 முதல் 01.03.07 வரை கர்நாடக மாநில யாத்திரை மேலக்கோட்டை, ஸ்ரீரங்கப்பட்டிணம், தலைகாவேரி, தர்மஸ்தலா, சுப்ரமணியா, உடுப்பி, முகாம்பிகை, கடில் துர்காபரமேஸ்வரி, கோகர்ணம், கொள்ளூர்,சிருங்கேரி, முருடீஸ்வரர், கலசாஅன்னபூர்ணா, பேலூர், ஹலபேடு ஆகிய திருத்தலங்கள் - சென்னை - பெங்களூர் - சென்னை - இரயில் பயணம் - இதர இடங்கள் 2X2 டிலக்ஸ் பஸ் மூலமாக பயணம் - கட்டணம் ரூ. 3650/-

⑤ 15.03. 07 முதல் 19.03.07 வரை முக்திநாத்/சாளக்கிராம யாத்திரை சென்னை - டில்லி - காட்மாண்டு - டெல்லி - சென்னை விமானம் மூலமாகவும் - முக்திநாத் சாளக்கிராமம்- ஹெலிகாப்டர் மூலமாகவும் பயணம் - விமான கட்டணம், சாப்பாடு, தங்குதல் உட்பட கட்டணம் ரூ. 36,500/-

⑥ 19.03.07 முதல் 30.03.07 - வரை காசி, கயா, அயோத்தியா, அலகாபாத், நைமிசாரண்யம்- கட்டணம் ரூ. 5,250/-

பங்கு பெறுவீர்! பாக்கியவான்களாவீர்! மாருதி யாத்திரை பக்தியுடன் பகவத் அனுகிரஹத்தைப் பெறுவதற்கே- மிகுந்த சௌகர்யத்திற்கும், வசதிக்கும் அல்ல.

**V.சீனிவாசன்**
(அமைப்பாளர்)

மேற்படி யாத்திரையின் கட்டணம் மற்றும் விவரம் அறிய சுய விலாசமிட்ட ரூ. 5/- ஸ்டாம்ப் கவருடன் விண்ணப்பிக்கவும்.

Visit our Website: www.srimaruthitravels.com

---

## குறைந்த விலையில் உத்திரவாதத்துடன் கூடிய 24ct தங்க பிளேட்டிங்கில் பளபளக்கும்

நர்த்தன விநாயகர்

கஜலெட்சுமி

சரஸ்வதி

வெங்கடாஜலபதி

சிவலிங்கம்

ஷீரடி சாய்பாபா

விக்ரகங்கள்

மற்றும் விளக்குகள் வாங்க.

மூன்று வருட வாரண்டி






Show room:
Next to jeeva park old # 85 G.N.Chetty Road, T.Nagar, Chennai - 17
Tel:28156370 Mobile 9840021384, 94443 58037
Timing:9.30 am to 7.00 pm SUNDAY HOLIDAY
for online purchase please visit:
www.chennaionline.com,www.indiaverta.com www.sifymall.com

குடல் இறக்கம் தெரியும். அடி இறக்கம் தெரியுமா? சிறுநீர்க் குழாய், மலக்குடல், கர்ப்பப்பை போன்றவை தம் இடத்திலிருந்து சரிந்து இறங்கி, வேறொரு இடத்துக்கு இடம் பெயர்வதைத்தான் அடி இறக்கம் என்கிறார்கள். இந்தப் பிரச்னை பெரும்பாலும் நாற்பது வயது தாண்டிய பெண்களுக்கே அதிகம் வருகிறது. 'இது ஏன்? எப்படி?' என்று நம்மிடம் கேட்ட இல்லத்தரசிகள் நால்வரை யூரோ கைனகாலஜி நிபுணர் டாக்டர் கார்த்திக் குணசேகரன் முன்பாக ஆஜர்படுத்தினோம்.

**அடி இறக்கம் யாருக்கெல்லாம் ஏற்படும் டாக்டர்?**

"நாற்பது வயதைக் கடந்த உடல் தசையில் வலுக் குறைந்தவர்கள், கர்ப்பப்பை அகற்றப்பட்டு நரம்புத் தளர்ச்சியால் பாதிக்கப்பட்டவர்கள், உடல் பருமன் அதிகமுள்ளவர்கள், ஆஸ்துமாவால் பாதிக்கப்பட்ட பெண்கள், புகைப்பிடிக்கும் பழக்கமுள்ள பெண்கள், மாதவிடாய் நின்றுவிட்ட ஈஸ்ட்ரோஜன் ஹார்மோன் இல்லாத பெண்கள் ஆகியோருக்கு அடி இறக்கப் பிரச்னை ஏற்படலாம். முதல் பிரசவம், சுகப்பிரசவம் ஆன பெண்களுக்கும் கூட இப்பிரச்னை வர வாய்ப்புள்ளது."

**அடி இறக்கம் வந்துவிட்டதை எப்படிக் கண்டுபிடிப்பது?**

"எந்தெந்த உறுப்புகளில் அடி இறக்கம் ஏற்பட்டுள்ளதோ, அதைப் பொருத்துத்தான் அதன் அறிகுறிகளும் அமையும். சிறுநீர்ப் பையில் அடி இறக்கம் ஏற்பட்டால், முழுமையாக சிறுநீர் கழிக்க முடியாது. அடிக்கடி அவசர அவசரமாக சிறுநீர் கழிக்க வேண்டி இருக்கும். மேலும் சிறுநீர்க் குழாய் இறங்கி, சிறுநீர்க் குழாயின் வாய் விரிந்து விடுவதால் சாதாரணமாகத் தும்மினாலோ, இருமினாலோ சிறுநீர்க் கசிவு ஏற்பட்டுவிடும். அடி இறக்கத்தால் பாதிக்கப்பட்ட 100 சதவிகிதப் பெண்களில் 50 சதவிகிதப் பெண்களுக்கு சிறுநீர்க் கசிவு பிரச்னையும் கண்டிப்பாக வரும்.

அடுத்து மலக்குடல் இறக்கம். இதில் ரெக்டோசில் அடி இறக்கம், ரெக்டல் அடி இறக்கம் என இருவகை உண்டு. ரெக்டோசில் அடி இறக்கத்தில் மலக்குடல் கீழே இறங்காமல், யோனிக் குழாய் வழியாக முன்பக்கம் வந்து விடுவதால் மலம் கழிக்க முடியாது. இப்படி மலம் கழிக்கச் சிரமப்படும்போது மூலம், குடல் இறக்கம் போன்ற வேறு சில உடல் உபாதைகளும் ஏற்பட வாய்ப்புள்ளது. ரெக்டல் அடி இறக்கத்தில் மலக்குடல் முழுவதுமாக ஆசன வாய் வழியாக வெளியில் வந்துவிடுவதால், ஆசனக்



குழாய் விரிந்து மலக்கட்டுப்பாடில்லா தன்மை ஏற்பட்டு விடுகிறது"

**இந்நோய்க்கான பரிசோதனை முறைகள் என்னென்ன?**

"பாதிக்கப்பட்ட பெண்கள் கூறும் அறிகுறிகள் மற்றும் உடல் பரிசோதனை முறைகளான MRI மற்றும் Ultra Sound Scaner பரிசோதனைகள் மூலம் இந்நோய் பீடித்துள்ளதை கண்டுபிடித்து விடலம். இதனுடன் 'Urodynamics' எனப்படும் சோதனையையும் மேற்கொள்ள வேண்டும். மறைந்திருக்கும் சிறுநீர்க் கசிவுப் பிரச்னையை இம்முறை தெள்ளத் தெளிவாக வெளிக்காட்டி விடும்."

# விழிப்புணர்வு



யூரோ கைனகாலஜி துறையில் நவீன பல சிறப்பு சிகிச்சைகள் வந்துவிட்டன. கர்ப்பப்பை, யோனிக் குழாய், சிறுநீர்க் குழாய் இவற்றில் எதில் அடி இறக்கம் ஏற்பட்டுள்ளது என்பதைத் தனித்தனியாகக் கண்டறிந்து, அதற்குத் தகுந்தாற்போல அறுவை சிகிச்சை செய்கிறார்கள்.

**அடி இறக்கத்துக்கான சிகிச்சை முறையைக் கூறுங்களேன்?**

"இது உயிர்க்கொல்லிப் பிரச்னையாக இல்லாததால் பெண்களுக்கு ஏற்படும் உபாதைகளைப் பொருத்துத்

• டாக்டர் கார்த்திக் குணசேகரன்



குடல் இறக்கம் வந்து விட்டால் வெளிப்புறத் தசையில் வலுகூட்ட மெஷ் (Mesh) என்னும் வலையைப் பயன்படுத்துவது போல, அடி இறக்கத்துக்கும் Graft என்னும் வலை பயன்படுத்தப்படுகிறது. வெளிநாடுகளில் பயன்படுத்தப்பட்ட இம்முறை தற்போதுதான் சென்னைக்கு

# அடி இறக்கத்துக்கு அடி!

தான் சிகிச்சை அளிக்க முடியும். இப்பிரச்னை ஆரம்பக் கட்டத்திலேயே தெரிய வந்தால், அறுவை சிகிச்சை செய்யாமல் உடற்பயிற்சி மற்றும் சாதாரண சிகிச்சை முறையில் குணப்படுத்தி விடலாம். தவறி விட்டுவிட்டால் அறுவை சிகிச்சைதான் ஒரே தீர்வு! சில வயதான பெண்கள் அறுவை சிகிச்சை செய்யாமல் Pessary என்கிற வளையத்தை அடி இறக்கம் ஏற்பட்ட இடத்தில் பொருத்திக் கொள்கிறார்கள். இது தாற்காலிக முயற்சிதானே தவிர, அறுவை சிகிச்சையைப் போன்று நிரந்தரத் தீர்வாகாது. மாதத்துக்கு ஒருமுறை இதை மாற்ற வேண்டியிருக்கும்.

பழங்காலத்திலிருந்து கர்ப்பப்பை சம்பந்தப்பட்ட பிரச்னைகளை மகப்பேறு மருத்துவர்கள்தான் கையாண்டு வருகிறார்கள். ஆனால் இப்போது அதைவிட வந்துள்ளது. எந்தப் பாகத்தில் அடி இறக்கம் ஏற்பட்டாலும் பாதிப்பு வராமல் இருக்க 'ப்ரோலாப்ஸ் கிட்' என்னும் சிகிச்சை உபகரணம் தற்போது பயன்பாட்டுக்கு வந்துவிட்டது. அறுவை சிகிச்சை செய்தவர்கள் இதனைப் பொருத்திக் கொண்டால் ஓரிரு நாட்களிலேயே வீடு திரும்பி அடி இறக்கத்தை அடித்து விரட்டி விடலாம். குடல் இறக்கம், அடி இறக்கம் குறித்த பல்வேறு சந்தேகங்களுக்கு விடையளிக்கும் வகையில் 'www. urogynecology.in' என்னும் வெப்சைட்டை தொடங்கியுள்ளோம். இது மக்களுக்கு, குறிப்பாகப் பெண்களுக்கு மிகவும் உபயோகமான ஒன்று."

- ம. சௌந்தர்யா

படம்: பொள்ளாச்சி சுந்தரம்



# கல்கி



2006 நவம்பர் 5
விய ஐப்பசி 19
மலர் : 65
இதழ் : 14

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## உச்சநீதிமன்றத்தின் சீரிய சிந்தனை

இட ஒதுக்கீட்டை உணர்வு ரீதியான அரசியலாக்கிப் பிழைப்பு நடத்திவரும் ஏராளமான அரசியல்வாதிகளுடைய செல்வாக்கு நம் நாட்டில் கோலோச்சிக் கொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட சூழலில், அஞ்சா நெஞ்சுடனும் சீரிய சிந்தனையுடனும் இப்பிரச்னையை அணுகி, இட ஒதுக்கீடுகளை நெறிப்படுத்த முயன்றிருக்கிறது உச்சநீதிமன்றம். ஜஸ்டிஸ் சபர்வால், ஜஸ்டிஸ் பாலகிருஷ்ணன், ஜஸ்டிஸ் கபாடியா, ஜஸ்டிஸ் தாக்கர், ஜஸ்டிஸ் பாலசுப்ரமண்யன் ஆகிய ஐந்து நீதிபதிகள் அடங்கிய பெஞ்ச், பணி நியமனம் மற்றும் பணி உயர்வுக்கான இட ஒதுக்கீடு ஐம்பது சதவிகிதத்துக்குள் அமைய வேண்டும் என்று உச்சவரம்பு விதித்ததோடு, வசதி படைத்த, முன்னேறிய குடும்பத்தினருக்கு ஒதுக்கீட்டுச் சலுகை வழங்கலாகாது என்றும் ஆணித்தரமாகக் கூறியிருக்கிறது.

அனேகம் பேர் இந்த ஆணையை வரவேற்றுள்ளதைப் போலவே வேறு பலர் இதனை எதிர்த்தும் குரல் கொடுத்துள்ளனர். எதிர்ப்புக்கான காரணங்கள் மிகவும் பலவீனமாக இருக்கின்றன.

'சமூக ரீதியாக ஒடுக்கப்பட்டவர்களுக்காகத்தான் ஒதுக்கீடு என்பதே ஏற்பட்டிருக்கிறது; ஆகவே பொருளாதார அடிப்படை என்பது ஒதுக்கீட்டை நிர்ணயிக்கலாகாது' என்கின்றனர் எதிர்ப்பாளர்கள்.

அப்படியானால், பிற்படுத்தப்பட்ட வகுப்பினரிடையேயும் முன்னேறிவிட்ட பிரிவினருக்கு மட்டுமே இட ஒதுக்கீட்டினால் ஆதாயம் விளையும். இந்த அபாயத்தைக் களையத்தான் உச்சநீதிமன்றம் இந்த ஆணையைப் பிறப்பித்துள்ளது.






''பிற்படுத்தப்பட்டோர், சீர் மரபினருள் பொருளாதார நலிவுற்றவர்கள் யார் என்பதை எவ்வாறு ஆய்ந்து கண்டுபிடிப்பது? அந்த ஆராய்ச்சியில் ஈடுபட ஆரம்பித்தால், இட ஒதுக்கீடு வலிமையும் அர்த்தமும் இழந்துவிடும்'' என்று மற்றொரு பிரிவினர் வாதாடுகின்றனர்.

பணி நியமனத்தின்போதே விண்ணப்பதாரர் குறித்த முழு விவரங்கள் கேட்டுப் பெறப்படுகின்றன. அப்போதே அவருடைய குடும்பப் பின்னணி, கல்வி - பொருளாதாரப் பின்னணி குறித்தும் ஆதாரங்களுடனான உண்மைகளைப் பெற முடியும்.

இதுநாள்வரை இந்த ஒதுக்கீடு அமைப்பினால் ஆதாயம் அடைந்து, பொருளாதார பலத்தைப் பெற்றவர்களுடைய ஆதரவும் பணபலமும் நமது அரசியல்வாதிகளுக்குத் தேவைப்படுகின்றன. மேலும், ஒரே ஜாதியினரிடையே அல்லது வகுப்பினரிடையே ஒதுக்கீட்டின் அடிப்படையில் பிரிவுகள் அமைந்தால் ஜாதியின் பெயராலும், வகுப்பு - இனப் பெயராலும் வோட்டு கேட்டு அரசியல் நடத்த முடியாமல் போய்விடும். அதனால் தான் அவர்கள் யாவருமே உச்சநீதிமன்றத்தின் இவ்வாணையை எதிர்க்கிறார்கள்.

இட ஒதுக்கீடு அறுபதாண்டுகளாக அமுலில் இருந்தும் அதன் விளைவாக ஒரு பயனும் அடையாத பிற்படுத்தப்பட்ட வகுப்பினரும் சீர் மரபினரும் இன்னமும் ஏராளமாக இருக்கின்றனர். உச்சநீதிமன்ற ஆணையில் குறை இருக்கிறது என்று இவர்கள் சுட்டிக் காட்டுவார்களா? அல்லது அந்த ஆணையை மனமுவந்து ஏற்பார்களா? இந்த ஆணையின் நோக்கத்தையும் அதனால் ஏற்படக்கூடிய விளைவுகளையும் புரிந்துகொள்ளும் அறிவும் ஆற்றலும் இருந்தால், அவர்கள் ஒருபோதும் அதை எதிர்க்கமாட்டார்கள்; வரவேற்று மகிழவே செய்வார்கள்.

ஒரு சமூகத்தில், காலப்போக்கில் ஏற்பட்ட ஏற்றத்தாழ்வுகளைக் 'கொடுமை' என்று இனம் கண்டு மாற்ற முயற்சி செய்கிறோம். அந்த முயற்சியினூடே மேலும் புதிய பல ஏற்றத்தாழ்வுகளை வலிந்து ஏற்படுத்துவது என்பது கொடுமையிலும் கொடுமை!

அறுபதாண்டுகளாக அமுலில் இருக்கும் ஒதுக்கீடால் இன்னமும் பயனடையாத வர்களைக் குறித்து உச்சநீதிமன்றம் சிந்தித்திருக்கிறது; பிற்படுத்தப்பட்டவர்கள் யார் என்பது குறித்து ஆரோக்கியமான மறுபரிசீலனையை நிகழ்த்தியிருக்கிறது.

அரசியல் நோக்கையும் சித்தாந்தப் பிடிவாதங்களையும் களைந்துவிட்டு, அந்த மறுபரிசீலனையை இந்த தேசம் ஏற்றுப் பின்பற்றுவது நல்லது. O

# Bata



“ஏழை மக்களும் வாங்கிப் பயன்படுத்தும் வகையில், குறைந்த விலையில் நீடித்து உழைக்கக்கூடிய காலணிகளைத் தயாரித்து விற்பனை செய்ய வேண்டும்; அதே சமயம், இந்த நிறுவனத்தை உலகமெங்கும் கிளைகள் கொண்ட ஓர் உலக நிறுவனமாக உயர்த்த வேண்டும். இது தான் என்னுடைய கனவு” - இப்படிக் கூறியவர் தாமஸ் பாட்டா. உலகப் புகழ் பெற்ற பாட்டா கம்பெனி நிறுவனர். தாமஸ் பாட்டா இன்று மறைந்துவிட்டார். ஆனால், அவர் கண்ட கனவு நனவாகி, இன்று உலகச் சந்தையில் காலணி என்றால் பாட்டாவை மிஞ்ச எதுவுமில்லை என்ற நிலை. இந்தப் பெருமைக்குரியவர் தாமஸ் பாட்டாவின் மகனான தாமஸ் பாட்டா ஜூனியர். பாட்டாவின் இன்றைய தலைமை நிர்வாகியாக இருப்பவர்.

செக்கோஸ்லோவேக்கியா நாட்டில் தலைமுறை தலைமுறையாகக் காலணிகளைத் தயாரித்து விற்பனை செய்து வந்த ஒரு பரம்பரையின் ஒன்பதாவது தலைமுறையைச் சேர்ந்தவர் தாமஸ் பாட்டா. தம் குடும்பத் தொழிலை ஒரு பன்னாட்டு நிறுவனமாக்க வேண்டும் என்று கனவு கண்டார். தமது சகோதரர் ஆண்டனின் மற்றும் சகோதரி ஆன்னா இருவருடனும் சேர்ந்து பாட்டா என்ற பெயரில் காலணி தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றை ஆரம்பித்தார். அடுத்த ஆண்டிலேயே ஆண்டனின் இராணுவப் பணியாற்றச் சென்றுவிட, சகோதரியும் திருமணமாகிச் சென்றுவிட்டார். தனி மனிதராக பாட்டா கம்பெனியின் நிர்வாகத்தை ஏற்றுக்கொண்ட தாமஸ் பாட்டா, தமக்கென ஒரு இலட்சியத்தை ஏற்படுத்திக்கொண்டு, அந்தப் பாதையில் படிப்படியாக முன்னேறினார்.



1894ஆம் ஆண்டில் செக்கோஸ்லோவேக்கியா நாட்டில் ஸ்லின் என்ற சிறு ஊரில் எளிய முறையில் ஆரம்பிக்கப்பட்ட பாட்டா நிறுவனம், பத்தே ஆண்டுகளில், நாளொன்றுக்கு இரண்டாயிரத்து இருநூறு ஜோடி காலணிகளைத் தயாரிக்கும் அளவுக்கு வளர்ச்சியடைந்தது. அடுத்த பத்து வருடங்களில் தினசரி உற்பத்தி இரண்டு லட்சத்தைத் தொட்டது. தொழிலாளர்கள் எண்ணிக்கை 250-லிருந்து 5000 ஆனது.

பாட்டா நிறுவனத்தின் வளர்ச்சிக்கு அங்கு பணியாற்றும் தொழிலாளர்கள் தான் முக்கிய காரணம் என்று திடமாக நம்பிய தாமஸ் பாட்டா, உற்பத்தியைப் பெருக்கியதோடு, தொழிலாளர்களின் நலனிலும் மிகுந்த அக்கறை காட்டினார். அவர்கள் மிகுந்த ஈடுபாட்டுடனும், அர்ப்பணிப்புடனும் தொழிற்சாலையில் வேலை செய்ய வேண்டுமென்றால், அவர்களுக்குக் குடியிருப்பு மற்றும் மருத்துவ வசதிகள் செய்து தரப்பட வேண்டும் என்று நம்பிய பாட்டா, தமது தொழிற்சாலைக்கு அருகிலேயே, தொழிலாளர்களுக்கு வீடுகளைக் கட்டிக் கொடுத்து, இதர வசதிகளையும் செய்து கொடுத்தார். எந்தவோரிடத்திலும் தொழிற்சாலை கட்ட வேண்டுமென்றால், தொழிற்சாலை கட்டி முடிப்பதற்கு முன்பாகவே அங்கு ஒரு குடியிருப்புப் பகுதியை உருவாக்குவது பாட்டாவின் கொள்கையாக இன்றளவும் இருந்து வருகிறது.

சூப்பர் BRAND



# சாம்ராஜ்யத்தின் சக்ரவர்த்தி!

காலணி உற்பத்தியில் வெற்றி நடை போட்டுக்கொண்டிருந்த வேளையில், விமான விபத்தொன்றில் மரணமடைந்தார் தாமஸ் பாட்டா. அப்போது அவரது மகன் தாமஸ் பாட்டா ஜூனியருக்கு வயது பதினேழுதான். தந்தையின் திடீர் மரணம், அவரைப் பெரும் சோகத்தில் ஆழ்த்தினாலும், விரைவிலேயே அதிலிருந்து மீண்டு, அப்பாவின் கனவுகளை நனவாக்குவதே தமது லட்சியம் என்று முடிவு செய்தார். துணிச்சலுடன் அப்பாவின் ஆசனத்தில் அமர்ந்தார்.

வயதில் இளையவர் என்றாலும், சாதிக்க வேண்டும் என்கிற வெறி பாட்டா ஜூனியரின் மனதுக்குள் அக்னிக் குஞ்சாகக் கனன்றுகொண்டே இருந்தது. உலகின் பல்வேறு நாடுகளிலும் பாட்டா தொழிற்சாலைகளைத் தொடங்கினார். குறைந்த விலையில் தரமான காலணிகளைத் தயாரித்து வழங்கியதுடன், மேல்தட்டு மக்களின் தேவைகளுக்கேற்ப நவீன காலணிகளையும் பாட்டா தயாரித்தது. ஃபேஷன் ஆர்வலரான சோஞ்சாவை தாமஸ் பாட்டா ஜூனியர் திருமணம் செய்துகொண்டார். அவரது திருமணம் பாட்டாவின் காலணிகள் வடிவமைப்பில் பல மாறுதல்கள் ஏற்படுவதற்கு வித்திட்டது. இன்று உலகம் முழுவதுமாக முப்பது நாடுகளில் பாட்டா தொழிற்சாலைகள் காலணிகள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளன. அவை பாட்டாவின் சுமார் ஐயாயிரம் நேரடி விற்பனை நிலையங்கள் மூலமாக கோடிக்கணக்கான வாடிக்கையாளர்களின் கால்களைச் சென்றடைகின்றன.

இந்தியாவில் பாட்டா கால் பதித்தது 1931ஆம் ஆண்டில்தான். கொல்கத்தாவுக்கு அருகில் கொன்நகர் என்ற இடத்தில் சிறு அளவில் ஆரம்பிக்கப்பட்ட பாட்டா நிறுவனம் 1934ஆம் ஆண்டு, கொல்கத்தா துறைமுக நிர்வாகத்துக்குச் சொந்தமான நிலத்தையும், அதனைச் சுற்றியிருந்த நூற்று ஐம்பத்தைந்து ஏக்கர் நிலத்தையும் வாங்கி, பிரம்மாண்டமானதொரு தொழிற்சாலைக்கு



அடிக்கல் நாட்டியது. இப்போது அந்தத் தொழிற்சாலை இருமடங்கு நிலப்பரப்பில் விரிவுபடுத்தப்பட்டு, ஊழியர் குடியிருப்பு, மருத்துவமனை, பள்ளிக்கூடம் என்று பல வசதிகளுடன் பாட்டா நகர் என்ற பெயர் கொண்ட டவுன்ஷிப்பாக விளங்குகிறது. காலணி உற்பத்தியில் சீனாவுக்கு அடுத்து, இரண்டாமிடத்தில் இருக்கும் இந்தியா

எஸ். சந்திரமௌலி

வில், காலணி சாம்ராஜ்யத்தின் சக்ர வர்த்தியாக விளங்குவது பாட்டாதான். ஆசியாவிலேயே மிகப்பெரிய காலணி உற்பத்தி நிறுவனமாக விளங்குவதும் அதுவே!

இந்தியாவில் பாட்டா நிறுவனம் உற்பத்தியைத் தொடங்குவதற்கு முன்னால், சின்னஞ்சிறு தயாரிப்பாளர்களும், ஒரு சில குறிப்பிட்ட சமூகத்தவர்களும் மட்டுமே காலணிகளைத் தயாரித்து விற்று வந்தார்கள். பாட்டா வந்த பிறகுதான், காலணி உற்பத்தி ஒரு தொழிலாக அங்கீகாரம் பெற்றது.

இந்திய கிராமங்களில் பெரும்பாலான மக்களுக்குக் காலில் செருப்பணியும் பழக்கம் கிடையாது. அப்படிப்பட்டவர்களிடையே செருப்பு அணியும் பழக்கத்தை ஏற்படுத்தினால், தங்களது மார்க்கெட்டைப் பலமடங்கு விரிவுபடுத்தலாம் என்று கணக்குப் போட்டது பாட்டா.




அதன்படி, இந்திய மார்க்கெட்டில் அறிமுகப்படுத்தப்பட்டவைதான் விலை குறைந்த, ரப்பரில் தயாரிக்கப்பட்ட ஹவாய் செருப்புகள். அறிமுகப்படுத்தப்பட்ட குறுகிய காலத்துக்குள்ளாகவே இந்திய கிராமங்களிலும், சிறு நகரங்களிலும், நகர்ப்புறங்களில் வசிக்கும் ஏழை மக்கள் மத்தியிலும் ஹவாய் செருப்புகள் மிகவும் பிரபலமாகிவிட்டன. இன்றுகூட, இந்தியா முழுவதும் அவற்றுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது.

மாறிவரும் மக்கள் ரசனைக்கேற்ப புதுப் புது ரகங்களில் காலணிகளை அறிமுகப்படுத்துவதை பாட்டா வழக்கமாகக் கொண்டுள்ளது. ஆண்களுக்கும், பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் விதவிதமான பாட்டா காலணிகள் இன்று விற்கப்படுகின்றன. விளையாட்டு வீரர்களுக்குப் பிரத்யேகமான ஷூக்கள் வந்துவிட்டன. நவநாகரிகத்தை விரும்புபவர்களுக்குக் கவர்ச்சிகரமான காலணிகள் கிடைக்கின்றன.

இந்தியாவில் மட்டுமின்றி, உலகமெங்கும் சுற்றுச்சூழலைப் பேணுவதில் பாட்டா பெரும் கவனத்தைச் செலுத்தி வருகிறது. காலணிகள் தயாரிப்பில் தோல் பயன்படுத்தப்பட்ட போதிலும்கூட, அதனால் நிலத்தடி நீருக்கோ, சுற்றுச்சூழலுக்கோ எந்தவிதமான குந்தகமும் வராமல் எச்சரிக்கையுடன் இருப்பதாகப் பெருமையுடன் கூறிக்கொள்கிறது பாட்டா நிறுவனம். ●

## பாட்டா : தெரியாத தகவல்கள்...

* இந்தியாவில் ஆண்டுதோறும் பாட்டா தமது 1600 கடைகள் மூலமாக ஏழு கோடி காலணிகளை விற்பனை செய்கின்றது.

* இந்தியாவில் மழைக் காலத்தில் அணிந்துகொள்வதற்கு வசதியாக பாட்டாவால் அறிமுகப்படுத்தப்பட்ட காலணி ரகம்தான் சாண்டக். குழந்தைகளுக்கான ஸ்பெஷல் ஷூக்கள் - பபுள்கம்மெர்ஸ்.

* பாட்டா நிறுவனம், கனடாவில் ஒரு ஷூ மியூசியத்தை நிறுவி பராமரித்து வருகிறது. அதில் தொன்மையான காலணிகளின் மாதிரிகள் முதல் உலக சாதனை படைத்த சில காலணிகள் வரையிலான அனைத்துக் காலணிகளும் ஏராளமான சுவாரஸ்யமான அம்சங்களும் இடம்பெற்றுள்ளன.

* பாட்டாவின் இணையதளம் www.bataindia.com

# உங்களில் பலருக்கு
# எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி
## ஒரு மரபாகும்

E/G ESTATE FRESH Coffee

வெகு காலமாக, புதிதாக தயாரிக்கப்பட்ட தரம் வாய்ந்த காபியை உங்கள் விருப்பத்திற்கேற்ற வகையில், உங்கள் ஒவ்வொருவருக்கும் நாங்கள் வழங்கி வருவதை நீங்கள் நன்கறிவீர்கள். மறுக்கவியலாத மற்றும் மிக உயர்ந்த தரத்துடன் எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி உற்பத்தி செய்யப்படுவதால், பலகாலமாக எங்கள் வாடிக்கையாளர்களால் அது பெரிதும் விரும்பப்பட்டு வருகிறது. தரத்தை விரும்பும் எங்கள் வாடிக்கையாளர்களின் வசதிக்காக, அவர்களுக்கு அருகாமையில் உள்ள கடைகளில் எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. காலம் காலமாக உங்கள் ஆதரவையே எங்கள் நோக்கமாக கொண்டுள்ள நாங்கள், உங்கள் பகுதி மற்றும் தமிழ்நாடு முழுவதிலும் எங்களது தரம் வாய்ந்த தயாரிப்பான எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபியை புதிய எழில்மிகு மற்றும் சிறப்பான பேக்கிங்கில் விநியோகிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. உங்கள் ஒவ்வொருவரின் நாவின் சுவையை திருப்தி செய்து, நீங்கள் சுவைக்கும் காபியின் மணம் உங்கள் நாவில் நெடுநேரம் நிலைத்திருக்கச் செய்வதே எங்கள் நோக்கமாகும். எனவே உங்கள் அருகாமையிலுள்ள பலசரக்கு கடைக்குச் சென்று, எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபியை கேட்டு வாங்கிப் பருகி, உங்கள் காபியின் விசேஷ மணம் மற்றும் சுவையை அனுபவித்து மகிழுங்கள்.







இதுபோன்ற நிறைவில்லை
வேறெந்த காபியிலும்

COFFEE 85% CHICORY 15%







EfG
Estate Foods & Grains

சென்னை மற்றும் தமிழகமெங்கும் வியாபார விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

தொடர்பு கொள்ள: Chennai:9841221796, Rest of Tamilnadu: 9486263342

## மனத்தின் பாய்ச்சல்

ஸ்வரூப விசேஷத்தை முதலில் வர்ணித்தால்தான், சராசரியாக இருக்கக் கூடியவர்களுக்கு அம்பாளைக் கண் முன்னால் கொண்டுவந்து, பிரத்யக்ஷமாக நிலைநிறுத்தி அந்த அம்பாள் ஸ்வரூபத்தின் மீது சிந்தையை ஒருமுகப்படுத்துகிற ஒரு தன்மை வரும். எவ்வளவுதான் வார்த்தையிலே சொல்லிவிட்டாலும் சில விஷயங்களை நடைமுறைப்படுத்துகிறபோது, சராசரி மனத்துக்கு அது கஷ்டமாக இருக்கும். கண்ணை மூடிக் கொண்டு, எங்கேயும் சர்வ வியாபகமாக இருக்கக் கூடிய பரமாத்மாவைத் தியானம் பண்ணு என்று சொல்லிவிடலாம்; சொல்வது ரொம்ப சுலபம். ஆனால் கண்ணை மூடிக் கொண்ட உடனேயே மனம் ஓர் இடத்தில் ஸ்திரமாக இருக்குமா, அல்லது ஒன்பதாயிரம் இடங்களுக்குச் சுற்றிவிட்டு வருமா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். கண்ணைத் இத்தனை இடங்களுக்கும் போய் வந்தேன்' என்று வந்து நிற்கும்! அதனால் மனத்தைக் கட்டுப்படுத்துவது - ஒருமுகப்படுத்துவது அவ்வளவு சுலபமன்று. கண் முன்னால் ஒரு தோற்றம் இருந்தால், அதனைப் பார்த்து இந்த மனம் ஒருமுகப்படும் என்பதனால்தான், மனத்தை ஒருமுகப் படுத்துகிற முதல் பிரயத்தனமாக அம்பாளின் ஸ்வரூப வர்ணனையாகச் சொல்வது. அவ்வாறு சொல்லி, அந்த ஸ்வரூபத்தின் மீது கண்ணையும் மற்ற புலன்களையும் கொண்டுபோய் ஐக்கியப் படுத்தினால், அதன் பிறகு அந்தப் புலன்கள் அங்கேயும் இங்கேயும் போகமாட்டா. ஒரு 'டிராக்' போட்டு இந்த இடத்தில் இந்தப் புலன்கள் நிற்க வேண்டும் என்பதற்காகத்தான் ஸ்வரூப வர்ணனையை ஸஹஸ்ரநாமம் நமக்கு முதலில் தருகிறது.

## அக்னியில் உதித்தவள்

தொடங்கும்போது மூன்று

# பரமேசுவரியின் புன்னகை!

## சுதா சேஷய்யன்

திறந்து கொண்டிருக்கும்போதாவது மனத்தை ஓரிடத்தில் நிறுத்த முடியும். கண்ணுக்கும் மனத்துக்கும் நேரடியாகத் தொடர்பு இல்லை என்றாலும் கண்ணுக்குத் தெரியாத விஷயம்தான் மனம் என்று சொன்னாலும் கூட, கண்ணைத் திறந்து கொண்டிருக்கிறபோதுதான் மனத்தைப் பிடித்து நிறுத்தவாவது முடியும். ஆனால் கண்ணை மூடிப் பார்ப்போமே... ஒரு நிமிடம் கண்ணை மூடிக் கொண்டால், அந்த அறுபது வினாடிகளில் மனம் அறுபதாயிரம் இடங்களுக்குப் போய் வந்துவிடும்! அறுபது கோடி யோகினிகளின் பெயர்களல்ல...; அறுபது கோடி இடங்களுக்கு அது போய்விட்டு வந்து, 'நான் தொழில்களைச் சொல்லியாயிற்று. நான்காவது திருநாமம் ரொம்ப அற்புதமான திருநாமம் :

### சிதக்னிகுண்ட ஸம்பூதா

பிரம்மாண்ட புராணம் என்கிற புராணத்தில் இடம்பெறும் பகுதிதான் லலிதோபாக்யானம். தேவி பாகவதத்திலே லலிதாம்பிகையைப் பற்றிய சரித்திரம் வரும்.

## மன்மத தகனம்

லலிதாம்பிகையின் திருவவதாரம்



எதற்காக நிகழ்ந்தது?

பண்டாஸுரனை வதம் செய்வதற்காகத் தோன்றிய வடிவம்தான் லலிதாம்பிகை வடிவம். எதற்காக பண்டாஸுர வதம் என்பதைச் சுருக்கமாகப் பார்த்தோமானால், மன்மதன் எரிந்துபோனான். அவன் உடலை இழந்த நிலையில் 'அனங்கன்' என்று பெயர்

●●

**''கண் முன்னால் ஒரு தோற்றத்தைப் பார்த்தால் மனம் ஒருமுகப்படும் என்பதால்தான், அதற்கு முதல் பிரயத்தனமாக அம்பாளின் ஸ்வரூப வர்ணனையைச் சொல்வது''**

●●

பெற்றான். அதன் பிறகு ரதி தேவி வந்து தன் நாதனுக்காக அழுதாள். ரதிதேவி கண்களுக்கு மட்டும் மன்மதன் தென்படுவான் என்று சொல்லி, அனங்கனாக, இன்றைக்கும் கூட உருவம் இல்லாதவனாகவே மன்மதன் இருக்கிறான்.

மன்மதனுடைய சாம்பல் எல்லாம் சேர்ந்துதான் பண்டாஸுரனாக மீண்டும் எழுந்து வந்தது என்று பிரம்மாண்ட புராணம் சொல்கிறது. இதற்கு என்ன அர்த்தம் என்றால், சில நேரங்களில் நமக்குள்ளே இருக்கக்கூடிய வக்கிரமான ஆசைகளைப் போட்டு அடித்து நசுக்குவோம். அப்படி நசுக்கினால், அது வேறு வடிவமாக வேறு இடத்தில் இன்னும் வக்கிரமாக, இன்னும் கொடூரமாக எழும் என்பதைத்தான் இந்த மன்மத - பண்டாஸுர கதை உணர்த்துகிறது.

மன்மதன் என்றைக்கோ இருந்தான், என்றைக்கோ அழிந்து போனான் என்பது இல்லை இக் கதை. ஸநாதன தர்மத்தின் கதைகள் இன்றைக்கும் உண்மையாக இருக்கின்றன. இதற்குக் காரணம், அவை ஒவ்வொரு ஜீவனுக்கும் பொருத்தமாக இருக்கக்கூடிய விஷயங்களைச் சொல்கின்றன.

மனத்துக்குள்ளே இருக்கக்கூடிய வக்கிரமான ஆசைகளை ஒடுக்கினால் போதாது; மனத்தை **நெறிப்படுத்த வேண்டும்** என்று சொல்வதற்காகத்தான் பண்டாஸுரன் கதையே ஏற்பட்டது.

## வயது பதினாறிருக்கும் இளவயது மங்கை

பண்டாஸுரன் சாம்பலிலிருந்து எழுந்து வந்தான். எல்லோரையும் துன்பப்படுத்தி, கொடுமைப்படுத்தினான். அவனிடமிருந்து எவ்வாறு தப்பிப்பது என்று அறியாமல் தவித்த தேவர்கள், அம்பிகையை நோக்கித் தவம் செய்தார்கள். இமயமலைச் சாரலில் தேவேந்திரன் தவம் செய்தான். அப்படித் தவம் செய்தபோது, அந்த யாக நெருப்பிலிருந்து, ஒரு தங்கத் தாம்பாளத்தில், பதினாறு வயது யௌவனப் பெண்ணாகத் தோன்றியவள் லலிதாம்பிகை என்பது கதை.

**சிதக்னி குண்ட ஸம்பூதா** - இதிலே சிதக்னி என்பதைக் கொஞ்சம் பிரித்துப் பார்ப்போம்.

அக்னி குண்ட ஸம்பூதா - அக்னி குண்டத்திலிருந்து எழுந்தவள். அக்னி குண்டத்திலிருந்து ஒரு தங்கத் தாம்பாளம் தோன்றியது. அதில் ஓர் அழகான இளம் பெண்ணாகத் தோன்றியவள் - மற்ற அவதாரங்கள் மாதிரி சின்னக் குழந்தையாகத் தோன்றி, படிப்படியாக வளரவில்லை. தோன்றும்போதே பதினாறு வயதுப் பெண்ணாகத் தோன்றினாள்.

## மகிழ்ச்சி தரும் லலிதை

இதிலே இன்னொரு விஷயத்தையும்

தேவி மஹாத்மியம் சொல்கிறது - லலிதாம்பிகை என்கிற திருநாமத்துக்கே மென்மையானவள் என்று பொருள். மனத்தில் மென்மையைத் தரக்கூடியவள் அவள்; மகிழ்ச்சியைத் தரக்கூடியவள்!

யாருக்கு மகிழ்ச்சியைத் தருகிறாள்? ஜீவர்களுக்கு. அதனால்தான் லலித கலைகள் என்று வடமொழியில் சொல்வார்கள். நாம் நுண்கலைகள் என்று சொல்கிறோமே, அந்த மாதிரி லலித கலைகள். எந்தக் கலைகள் மனத்துக்கு இதம் தருகின்றனவோ அந்தக் கலைகள் லலித கலைகள். மகிழ்ச்சியைத் தரக் கூடியவள் லலிதாம்பிகை.

மகிழ்ச்சியைத் தரக்கூடிய பதினாறு வயது குமரியாக அவள் வந்து நின்ற போது, உலகத்துக்கெல்லாம் தந்தையாக - லோகஜனகனாக இருக்கக்கூடிய சாக்ஷாத் பிரம்மாவுக்கு மனத்துக்குள் ஒரு நெருடல் வந்ததாம்... அவள் அம்பிகை தான் என்பது தெரியும். ஆனால், அப்படித் தெரிந்தால்கூட அந்தத் திரோபாவம் வந்து கண்ணை மறைக்கிறது! பிரம்மாவுக்கே மறைக்கிறது!

'ஆஹா! இவ்வளவு அழகான பெண்ணாகத் தோன்றியிருக்கிறாளே! இவளுக்குக் கல்யாணம் பண்ணி வைக்க வேண்டாமா?' என்கிற கவலை வருகிறது பிரம்மாவுக்கு!



## பிரம்மாவின் கவலை

யாருக்கு அந்தக் கவலை வரும்? மகளைக் குறித்து அப்பாவுக்குத்தானே வரும்! உலகத்துக்கே தந்தையாக இருக்கக் கூடிய பிரம்மாவுக்கு வந்ததாம் - அந்தக் கவலை! 'இந்த அழகான பெண்ணுக்கு நான் எங்கு போய் மாப்பிள்ளை தேடுவேன்? யாரிடம் போய்த் தேடுவேன்? ஈரேழு பதினாலு உலகங்களிலேயும் எங்கே போய் இவளுக்குப் பொருத்தமான மணமகனைத் தேடுவேன்?' என்று மனத்துக்குள்ளே நினைத்தாராம்!

அவர் மனத்துக்குள் அந்த எண்ணம் வந்தவுடனேயே, ஈரேழு பதினாலு லோகங்களையும் படைக்கக்கூடிய பரமேசுவரிக்கு அந்தக் கவலை புரிந்ததாம். உடனே அவள் இலேசாக ஒரு புன்னகை பூத்தாளாம். அப்படி அவள் புன்னகை புரிந்த மாத்திரத்தில், சாக்ஷாத் பரமேசுவரராக இருக்கக்கூடிய காமேசுவரர் அங்கு வந்து நின்றதாகவும் காமேசுவரிக்கும் காமேசுவரனுக்கும் தேவர்களெல்லாம் ஒன்றுகூடி நின்று திருமணம் நடத்தியதாகவும் புராணம்!

அப்படித் திருமணம் நடத்திய பிறகு, அந்த அம்பிகை வாஸம் செய்வதற்காக - காமேசுவரனும் காமேசுவரியும் வாஸம் செய்வதற்காக - ஸ்ரீபுரத்தை நிர்மாணித்தார்கள். ஸ்ரீபுரம் என்பது அம்பிகை வாஸம் செய்யக் கூடிய இடம். அந்த ஸ்ரீபுரம் எங்கே இருக்கிறது...?

- (தொடரும்)

தேனினிய குரலால் தென்னிந்தியத் திரை உலகையே ஏறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகள் தம் கைக்குள் வைத்திருந்த பின்னணிப் பாடகி பி.லீலாவை, காதுள்ள அத்தனை பேரும் அறிவார்கள். கம்பீரத்தைத் தாய்மையோடு குழைத்த குரல். 'வாராயோ வெண்ணிலவே' என்ற 'மிஸ்ஸியம்மா' படத்துப் பாடல் உள்ளிட்ட மனம் கவர்ந்த பல பாடல்களைப் பாடிய அவர் சமீபத்தில் இயற்கை எய்தினார்.

தம்மை அழைத்துப் பாடச் சொன்ன போது, 'இப்பாடலை என்னைவிடச் சிறப்பாக ஜானகி பாடுவார்' என 'சிங்கார வேலனே தேவா' பாடலை பெருந்தன்மையோடு விட்டுக்கொடுத்த ஈர இதயம் அவருடையது. 1968-ல் முற்றிலும் பெண்களாலேயே தயாரிக்கப்பட்ட 'சின்னாரி பாப்லு' என்ற தெலுங்குப் படத்துக்கு இசையமைத்த பெருமையும் கொண்டவர்.

தாய்மொழி மலையாளம் எனினும், 'வாராயோ வெண்ணிலா'வை அவரைப் போல ரசித்து உச்சரிக்க வேறு யாரால் முடியும்? நடிப்பவர்க்குப் பொருந்துகிற குரலைத் தேர்ந்தெடுத்துப் பாட வைப்பது கவனம் குவியாத நிலையை உண்டாக்கி விடும் துர்பாக்கியமுடையது. 'துட்டுக்காகத்தான் எழுதுகிறேன்' எனப் பகிரங்கமாக அறிக்கை விடுவதும், 'கேட்பதைத் தருகிறேன்' எனக் கித்தாப்பு கொள்வதும் எவ்விதத்திலும் படைப்பாளிக்கு நலன் பயக்காது.

தஞ்சை மானம்பு சாவடியில் 1914-ல் பிறந்த ராமையாதாஸ், பள்ளி ஆசிரியராகப் பணிபுரிந்தவர். தேசிய இயக்கத்தில் தீவிரப் பற்றுக்கொண்ட ராமையாவை, அக்காரணத்தைக் காட்டி கல்வி அதிகாரி கண்டிக்க, ஆசிரியப் பணியைத் துறந்து விட்டு நாடக ஆசிரியராகப் பரிணமித்தவர். 'மச்சரேகை' என்ற நாடகத்தின் மூலம் கிடைத்த புகழ் இவரைச் சினிமாவில் கொண்டுவந்து சேர்த்தது.

'பிருந்தாவனமும் நந்தகுமாரனும்
யாவருக்கும்
பொது செல்வமன்றோ?
ஏனோ ராதா இந்தப் பொறாமை
யார்தான்
அழகால் மயங்காதவரோ?' என்று 'மிஸ்ஸியம்மா'வில் எழுதிய ராமைய்யாதாஸ், தமது பாடலைக் கிண்டல் செய்து எழுதிய வசனகர்த்தாவை அழைத்து 'நல்லாத்தான் திட்டியிருக்க;

# மலராக... மரமாக... உரமாக!

யுகபாரதி

அன்றைய முறை. ஒருவருடைய குரலை வியக்கும் நேரத்தில் அக்குரலில் தோயும் சொற்களை விட்டுவிடக் கூடாது. தஞ்சை ராமையாதாஸ் வரிகளுக்காக பெரிய பெரிய கண்டனங்களைச் சம்பாதித்துக் கொண்டவர். மக்களைச் சந்தோஷப்படுத்தவே பாடலென்று புரிந்து வைத்திருந்தவர்.

சந்தையை முன்வைத்து ஒரு படைப்பாளி வெளியிடும் கருத்து, பின்னாளில் அவருடைய படைப்பு மீது போதிய

ரொம்ப ரசிக்கிற மாதிரி இருக்கு. ஆனா, சினிமா என்ன தமிழ் வளர்ச்சிக் கழகமா?' எனக் கேட்டிருக்கிறார். அவ்வாறு விமர்சனத்துக்குப் பதில் விமர்சனத்தை அவர் வைத்தபோதும் 'குலேபகாவலி' படத்தில் 'உலகத்தைத் துறந்தவன்தானே ஞானி?' என்று ஒரு பெண் கேட்க, 'உலகத்தைத் துறந்தவன் ஞானியல்லன்; உலகத்தை உணர்ந்த

# நேற்றைய காற்று



12

வன்தான் ஞானி' என்றும் "நான் மறையைக் கற்றவன் ஞானி இல்லையா?'' என வினவியபோது, "'நான்' மறையக் கற்றவனே ஞானி!" என்று வசனமெழுதிய அற்புதத்தைக் கவிஞர் முத்துலிங்கம் தமது 'காற்றில் விதைத்த கருத்து' நூலில் குறிப்பிட்டிருப்பார்.

'முடியுமென்றால் முடியாது
படியுமென்றால் படியாது
வஞ்சகரின் வார்த்தையிலே
அர்த்தமே வேறுதான்
அகராதியும் வேறுதான்' என்றும்

எழுதிய ராமையாதாஸ், ஒரு பாடலை ஜனரஞ்சகமாகப் படைத்துப் பாராட்டுப் பெறுவதில் சமர்த்தர் என்கிறார்கள். படத் தயாரிப்பாளர், இயக்குநர், இசையமைப்பாளரின் வேண்டுகோளை ஏற்று மதிக்கும் மனமுடைய ராமையாவுக்கும் ராமுலுவுக்கும் ஒரு முறை பட்சி ராஜா ஸ்டூடியோவில் ஒரு பாடலுக்கான பல்லவியின்போது தகராறு ஏற்பட, 'எத்தனை காலம்தான் ஏமாற்றுவார்' என்ற பாடலின் இதர வரிகளை வேறொருவர் எழுதும்படியும் நேர்ந்திருக்கிறது. பட்டதைச் செய்தவர் என்பதைத் தவிர, சொல்வதையெல்லாம் ஏற்றுத் தலையசைத்தவரல்ல, ராமையாதாஸ்!

1958-ல் குமுதம் பத்திரிகையில் ஒரு விவாதம். சினிமா பாடல் இலக்கியம் ஆகுமா? ஆகாதா? என்று. ஆகாதென்று வாதிட்டவர் கண்ணதாசன். ஆகும் என்று கூறியவர் சுரதா. 58-ல் தொடங்கிய இவ்விவாதம் அன்று வந்த ராமையாதாஸ் பாடல்கள் மீது சேற்றையும் சந்தனத்தை

பணம் காசு
தேவையில்ல... உன்
அன்பு மட்டும்
போதும் பாவனா!

யும் சேர்த்துப் பூசிய கதைகள் விவாதித்த வர்களின் மேதைமையை வெளிப்படுத்தின. வாதம் முடிந்தபாடில்லை; வாதிட்டவர் கள் மறைந்து விட்டார்கள்.

திரைப்பாடல் இலக்கியமாகாது என்று கங்கணம் கட்டி விவாதித்த கண்ணதாசன், தம்முடைய 'சிவகெங்கைச் சீமை' படத் துக்குப் பாடல் எழுதக் கேட்க தஞ்சை யாரிடம் போயிருக்கிறார். ஒரு கவிஞர் இன்னொரு கவிஞரிடம் பாடல் கேட்டு தம்முடைய படத்தில் பயன்படுத்த விரும்பிய நாகரிகம் நெகிழ வைக்கிறது.

'பக்தர்கள் போற்றுவார்
பலருன்னைத் தூற்றுவார்
இத்தரையில் மாந்தர்
எதையுமே மாற்றுவார்
பக்தியே மறைந்தாலும்
சத்தியம் மறையாது' என்று
உதவி என்றதோர்
நூலைக் கொண்டு
உயர்ந்து செல்லும்
அதனாலே' என்பதையும் அறிந்து வைத்திருந்தார். ராமையாதாஸ் என்றதுமே 'ஜாலியோ ஜிம்கானா'வை சொல்லித் தரமில்லா பாடலைப் புனைந்தவர் எனக் கருத்துப் பேசும் ஒருவராவது அவருடைய மொத்தத் திரைப் பங்களிப்பையும் கணக்கிலெடுத்துக் கொள்கிறார்களா? தெரியவில்லை.

ஐம்பதுகளில் திரைப்பாடலின் அரசனாகத் திகழ்ந்த ராமையா, தமது கடைசிக் காலத்தில் உடுமலையைச் சந்தித்து 'நான் பாட்டு எழுதினேன். நான் பாட்டுக்கு எழுதினேன், நீங்களாவது நல்ல தமிழை எழுதுங்கள்' என வாழ்த்தியிருக் கிறார்.

## ராஜம் ரகசியங்கள்!

"ஓவியர் ராஜம் கலைமகள் பத்திரிகையில் அற்புதமான, தனித்தன்மை மிக்க சித்திரங்களை வரைந்ததைப் பார்த்து வியந்து மகிழ்ந்தனர் ரசிகர்கள். ஆனால் அவர்களுள் யாருக்குமே, அதே ராஜம்தான் 'சீதா கல்யாணம்' திரைப்படத்தில் ராமராக நடித்தவர் என்பது தெரியாது! 'சீதா கல்யாணம்' படக் கதாநாயகனாக அவரை அறிந்தவர்களுக்கோ அவரது ஓவியத் திறமை தெரியாது! தமது ஆற்றல்களை எஸ்.ராஜம் பறைசாற்றிக் கொண்டதுமில்லை; அவற்றைப் பெரிதாக எண்ணியதுமில்லை என்பது எவ்வளவு பெருமைக்குரியதோ, அவ்வளவு வருத்தத்துக்குரியது- அவருக்குரிய கௌரவங்கள் வந்து சேராதது" - இவ்வாறு பேசியவர் சுருதி இதழின் ஆசிரியர் கே.வி.ராமநாதன்.

மிகச் சிறந்த இசை வித்தகர் என்பது எஸ்.ராஜத்தின் மற்றொரு பரிமாணம்.

கே.வி.ஆரின் வருத்தத்தை ஓரளவுக்குப் போக்கும் வகையில் அமைந்திருந்தது அன்றைய நிகழ்ச்சி - அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை செட்டியார் நினைவு (தமிழிசைக்கான) விருதையும்

'வணங்காமுடி' படத்தில் 'ஆண்டவன் இல்லையே' பாடலில் வரும் சொற்கள் சொற்களல்ல, சூரியப் பிள்ளைகள். தேசிய வாதியாகத் தம்மை வெளிப்படுத்திக் கொண்ட தஞ்சையார், ராஜாஜி மீதும் அவருடைய எழுத்துகள் மீதும் தீராப் பற்றுக் கொண்டவர். அரசியல் சார்போடு இயங்கும் தன்மை கொண்டிருந்த போதிலும்,

'பதவி என்றதோர்
பட்டம் வானில்
பறந்து செல்வது
எதனாலே?- மக்கள்

'பதுமை போல
காணும் என்றன்
அழகிலே - நான்
படகு போல தத்தளிக்கும்
நிலையிலே' என்று காதலுவமையால் 'அடுத்த வீட்டுப் பெண்' படப்பாடலின் மூலம் கவரும் ராமையா 'திருக்குறள் இமையமுதம்' என்றெழுதி கிருஷ்ண மூர்த்தி பிள்ளையை வைத்து ஸ்வரமாக்கி, எம்.ஜி.ஆரை வைத்து வெளியிட்டிருக் கிறார். ஒரு பாடலை எப்படி எப்படி யெல்லாம் சிந்திக்கலாம் எனக் கற்றிருந் தவர், காலத்தின் மாறுதலுக்கேற்ப தமது

கருத்துப் பொம்மைகளையும் கைமாற்றிக் கொள்வது தவிர்க்க முடியாதென்றே நினைக்கிறேன். கருத்துகள் பொம்மை களாக இருக்கும் பட்சத்தில் அதை மாற்றிக்கொள்வது யார் பிழை?

'கடன் வாங்கிக் கல்யாணம்' என்றொரு திரைப்படம். காலந்தோறும் காதலுக்கும் காதல் வாழ்வுக்கும் அன்பு தான் பிரதானம் என்பதைப் பாடல்கள் வலியுறுத்தி வருகின்றன. பாடல்கள் மட்டுமல்ல; இலக்கியம் முழுவதுமே, தத்துவங்கள் அத்தனையுமே அதைத்தான் உணர்ச்சிபூர்வமாகவும் அறிவுபூர்வமாகவும் சொல்லி வந்திருக்கின்றது. அந்தத் தளத்தை உணர்த்தும் விதமாக 'சுந்தராங்கியைப்' பாடலில் எழுதியிருப்பார். அதில்,

*'காதல் சோதனையில்*
*கவலையினால் மனம்*
*வேகாதா?*
*காதல் போட்டியில்*
*வெற்றி காணும் வரை*
*கலவரம் கனவிலும்*
*ஆகாதா?'*

தமிழாசிரியராக வாழ்வைத் தொடர்ந்து, நாடக ஆசிரியராக உருமாறி, பாடலாசிரியராக, வசனகர்த்தாவாக தம்மை அடையாளப்படுத்த விரும்பிய ராமையாதாஸ், தம் பாடல்கள் குறித்து அவரே அதிருப்தியுற்று சொன்ன வாசகங்கள் யாவும் தமிழின் மீது அவருக்கிருந்த பற்றையும் அன்பையும் புலப்படுத்துகின்றன.

'என்னைவிடச் சிறப்பாகச் செய்யுங்கள்' என ஒருவரால் சொல்ல முடிவது, செய்த சிறப்புகளுக்கெல்லாம் மீறின

பரிசையும் எஸ்.ராஜத்துக்கு வழங்கியதையொட்டி, ஹம்ஸத்வனி அமைப்பின் ஆதரவில் ஒரு பாராட்டு விழா. வி.வி. ஸ்ரீவத்ஸா, ஹம்சத்வனி ராமச்சந்திரன், கலாநிதி நாராயணன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் சார்பில் ஒ.எஸ்.தியாகராஜன் எனப் பலர் ராஜத்தின் எளிமையையும் திறமையையும் வியக்க, இந்நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்து தொகுத்து வழங்கியவர் ராஜமுடைய சிஷ்யை விஜயலக்ஷ்மி சுப்ரமண்யம்.

சம்பிரதாயமான ஏற்புரையை வழங்குவதற்குப் பதிலாக, சங்கீத நினைவுகளைப் பகிர்ந்துகொண்டு ரசிகர்களைச் சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்தார் எஸ்.ராஜம்.

**- ரஸிகா**

**• எஸ்.ராஜம், சிஷ்யை விஜயலக்ஷ்மியுடன்.**



*கலந்ததினாலே*
*சிலபேர் பரவசமடைவது*
*ஏன்?*
*சில பேர் கலவரமடைவது*
*ஏன்?'* என்று கேட்டு அவரே பதிலாகவும் சொல்லும் வரிகள் மிகைப்படப் புகழத்தக்கவை. பரவசம், கலவரம் இரண்டுக்கும் இடையிலுள்ள நெருக்கத்தை மகிழ்ச்சி ஊசிகள் குத்தின என, வித்யாபதி கவிதை வர்ணிப்பதைப் போலச் சாதுர்யமாகக் காட்டியிருப்பார்.

*'கன்னியின் அருகில்*
*அன்னியன் இருந்தால்*

சிறப்பு. தமிழ்ப்பெரு நிலத்தில் விதைக்கப்படும் ஒவ்வொரு செடியும் மலராக, மரமாக மாறியிருப்பதைப் போல, தெறித்த வீழ்ச்சிகளும் உரமாகப் பயன்பட்டிருக்கின்றன. இலக்கியச் செழுமையோடு ஒருவருக்கு இதயச் செழுமையும் தேவை. புரிந்தும் புரியாததுபோல தோன்றும் காட்சியே வாழ்க்கை, வாய்ப்பு, இலக்கியம்.

**(வீசும்)**



# சைனஸுக்குத்

26 வயதாகும் எனக்கு மேல் தாடைப் பற்கள் தூக்கலாக இருந்தன. இரண்டு வருடங்களுக்கு முன்பு ஆர்த்தோடாண்டிக்ஸ் (கம்பி கட்டுதல்) சிகிச்சை மேற்கொண்டேன். முன்னே தூக்கிக்கொண்டிருந்த என் பற்கள், தற்போது உள்நோக்கிச் சாய்ந்துவிட்டன. ஆனால் இப்போதும் நான் சிரித்தால் எனது ஈறு வெளியே தெரிவதோடு, உதடுகளை முழுவதுமாக மூட இயலவில்லை. இதைச் சரிப்படுத்த இயலுமா?

- மகாலக்ஷ்மி, கோவை.

**டாக்டர் எஸ்.எம்.பாலாஜி** *(முகச்சீரமைப்பு நிபுணர்)*:

உங்களுக்கு உள்ள குறைபாட்டுக்கு மேல்தாடை மிகை வளர்ச்சி என்று பெயர். அறுவைச் சிகிச்சை மூலம் மட்டும்தான் இதைக் குணப்படுத்த இயலும். அதாவது மேல் தாடையில் ஒரு 'கட்' போட்டு அதிகப்படியான எலும்பை எடுத்துவிட்டு, தாடையை உள்ளே தள்ள வேண்டும். பெரும்பாலானோர் பயப்படுவதுபோல் இது ஆபத்தான அறுவை சிகிச்சை அல்ல. எளிய அறுவை சிகிச்சை. சிகிச்சை முடிந்த மறுநாளே டிஸ்சார்ஜ் ஆகிவிடலாம். சிகிச்சைக்குப் பிறகு இயல்பான உணவுப் பொருள்களை உண்ணலாம்; அலுவலகப் பணியில் ஈடுபடலாம்; பள்ளி, கல்லூரிக்கும் செல்லலாம். பக்க விளைவுகள் எதுவும் ஏற்படாது.

என் மகனுக்குப் பெண் தேடினோம். நல்ல வரனாக அமைந்தாலும் அந்தப் பெண்ணுக்குச் சர்க்கரை வியாதி இருப்பது தெரிய வந்துள்ளது. இதனால் தம்பதியின் தாம்பத்ய உறவில் பிரச்னை ஏற்படுமா? பிறக்கப் போகும் குழந்தைகளுக்கும் சர்க்கரை வியாதி வந்துவிடாதா?

- பிரேமாவதி, சென்னை - 34

**டாக்டர் மாதுரி எஸ். பாலாஜி** *(சர்க்கரை நோய் நிபுணர்)*:

டயாபடீஸ் ஆணிடமிருந்து பெண்ணுக்கோ, பெண்ணிடமிருந்து ஆணுக்கோ தாம்பத்ய உறவில் பரவக்கூடிய வியாதி அல்ல. மாறாக, பரம்பரைத் தன்மை கொண்ட ஒரு குறைபாடே! ஒரு குடும்பத்தில் ஒன்றுக்கு மேற்பட்டோருக்கு டயாபடீஸ் இருந்தால், கண்டிப்பாக அவர்களுடைய வருங்கால சந்ததியினருக்கும் வர வாய்ப்புண்டு. டயாபடீஸ் யாருக்கு வேண்டுமானாலும் வரும்.



• மாதுரி எஸ்.பாலாஜி

ஆக, திருமணத்துக்குப் பிறகு உங்கள் வருங்கால மருமகளுக்கு டயாபடீஸ் வந்தால் என்ன செய்வீர்கள்?

அப்படியும் 'என் பேரன், பேத்திகளை டயாபடீஸிலிருந்து காக்க வேண்டும், டயாபடீஸ் இல்லாத பெண்ணைத்தான் திருமணம் செய்து வைப்போம்' என்று நீங்கள் அடம் பிடித்தால், முதலாவது உங்கள் உறவினர் எவ



• எஸ்.எம்.பாலாஜி

# தீர்வு...



ருக்கும் டயாபடீஸ் இருக்கக்கூடாது. அந்தப் பெண்ணுக்கும், அந்தப் பெண்ணைச் சார்ந்த குடும்பத்தாருக்கும் டயாபடீஸ் இருக்கக் கூடாது. அப்படிப்பட்ட பெண்ணைத் தேடிக் கண்டுபிடித்தால், பிறக்கப் போகும் உங்கள் பேரன், பேத்திகளை டயாபடீஸிலிருந்து (டையாபடீஸ் பாரம்பரியமாக முப்பது வயதுக்கு மேல்தான் வரும்) காக்க வாய்ப்பு உள்ளது. அப்படிப்பட்ட பெண் இன்றைய சூழலில் அமைவது கடினம்.

டயாபடீஸ் உள்ள பெண்ணைத் திருமணம் செய்து வைத்தாலும்கூட கர்ப்ப காலத்தில் மருத்துவர்களின் ஆலோசனையைக் கேட்டு, சர்க்கரையைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொண்டால் எந்தப் பிரச்னையும் இல்லாமல் சுகப்பிரசவத்துக்கு வழியமைக்கலாம்.

**எ**னக்கு இப்போதெல்லாம் தலைவலி, மூக்கடைப்பு தொந்தரவு அதிகமாக உள்ளது. பலரும் சைனஸாக இருக்கும் என்று சொல்கிறார்கள். எப்படி இதனை அறிந்துகொள்வது? அப்படி இருந்தால் அதற்குத் தீர்வு என்ன?

- எஸ்.அபர்ணா, கோடம்பாக்கம்

டாக்டர் ஹரிணி டி.தாஸ் (காது மூக்கு தொண்டை நிபுணர்):

**த**லைவலிக்கும், மூக்கடைப்புக்கும் பல காரணங்கள் இருக்கலாம். சைனஸ்தான் என்று நினைத்துக் கொள்ளக் கூடாது. தொடர்ந்து இத்தொல்லைகள் இருக்கும் பட்சத்தில் கண்டிப்பாக காது, மூக்கு, தொண்டை நிபுணரை அணுகுவதுதான் நல்லது. சைனஸ் இருந்தாலும் கவலைப்படத் தேவையில்லை. இப்போது நல்ல பல சிகிச்சைகள் உள்ளன.

சைனஸை முழுமையாகக் கண்டறிய முக்கிய இரண்டு பரிசோதனை முறைகள் உள்ளன. ஒன்று சி.டி. ஸ்கேன், மற்றொன்று நாசல் எண்டோஸ்கோபி. சைனஸுக்கு நல்ல தீர்வு, ஆபரேஷன் செய்வதுதான். இதனால் எந்தப் பின்விளைவும் ஏற்படாது. பயமின்றி மருத்துவரை நாடுங்கள்; சிகிச்சை பெறுங்கள்.

• ஹரிணி டி.தாஸ்



தொகுப்பு : **மனோ**

படங்கள்: **பொள்ளாச்சி சுந்தரம்**

## அனுபவம்





# பெருமாளே நேரில் வந்து...

**நா**ன், என் கணவர், என் கணவருடைய அண்ணா மூன்று பேரும் ஸ்ரீமுஷ்ணம் சென்றோம். எனக்கு ஆஸ்துமா தொந்தரவு இருந்தது. கோயில் பிராகாரத்தை அடைந்ததும் எனக்கு இருமல் ஜாஸ்தியாகி வாந்தி எடுத்துவிட்டேன். சன்னிதிக்குள் செல்ல மனமின்றி பிராகாரத்திலேயே நின்றுவிட்டேன். அர்ச்சகர் இதைக் கவனித்துவிட்டு, 'உங்களுடன் வந்த பெண் எங்கே?' என்று கேட்டிருக்கிறார். அப்பொழுதுதான் இருவரும் நான் பின்னால் வராததைக் கவனித்து இருக்கிறார்கள். வெளிப் பிராகாரத்துக்கு வந்து அர்ச்சகர் என்னிடம் விஷயத்தை அறிந்து 'அதனால் பரவாயில்லை அம்மா; வாருங்கள்' என்று கூறி அழைத்து, அர்ச்சனைகள் செய்து பிரசாதமும் கொடுத்தனுப்பினார். பெருமாளும் தாயாருமே நேரில் என்னை அழைத்ததுபோல் மெய்சிலிர்த்துப் போனேன்.

**- விஜயலக்ஷ்மி வேங்கடேசன், கொட்டிவாக்கம்**



**கோ**யில்களில் திருமஞ்சனம் முடிந்த பிறகு பக்தர்களுக்குப் பிரசாதங்களைக் கைகளில் வழங்குகின்றனர். பக்தர்கள் கை கழுவ குழாயைத் தேடிச் செல்ல வேண்டியுள்ளது. சாப்பிட்ட இடங்களில் ஈக்கள் மொய்க்க ஆரம்பித்து விடுகின்றன. பக்தர்கள் கால்களிலும் பிசுபிசுவென ஒட்டுகின்றன. திருமஞ்சனம் செய்யும் உபயதாரர்கள் செலவில் பக்தர்களுக்குத் தொன்னையிலே பிரசாதம் கொடுத்தால், கோயில் சுத்தமாக இருக்குமே!

**- என்.கோதண்டராமன், மதுராந்தகம்**

**கா**சிக்குப் போய் கர்மத்தை களைந்து மோட்சமடைய வேண்டுமென்னும் தமிழக மக்களின் சங்கல்பத்தை மிக எளிதாக்கி விட்டன இன்றைய போக்குவரத்து வசதிகள். வாரம் இருமுறை சென்னையிலிருந்து 'கங்கா காவிரி' எக்ஸ்பிரஸ் புறப்படுகிறது. 'வாரணாசி' ஸ்டேஷனில் இறங்கி 'கேதார்காட்' என்ற இடத்துக்குப் போனால், அங்கு குமாரஸ்வாமி மடம். இங்கு சகல வசதிகள் நிறைந்த அறைகள் உள்ளன. எதிரே உள்ள கங்கையில் நீராடிவிட்டு ஒரு கிலோமீட்டர் நடந்து சென்றால், காசி விஸ்வநாதர் நமக்குத் தரிசனம் தருகிறார். சற்று தூரத்தில் விசாலாட்சியும் அன்னபூரணியும் அமர்ந்து அருள்பாலிக்கின்றனர்.

**- ஏ.மோகனசுவாமி, கொளத்தூர்**





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.

கிளை நிறுவனம் : புதிய எண். 16, பழைய எண். 19, முதல் மாடி, 30வது தெரு,
தில்லைகங்கா நகர், நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/ வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

# அடப்புக்காட்டு காதல்!

கணவனிடம் அனுமதி வாங்கி ஊருக்கு வருவதற்குள் போதுமென்றாகிவிட்டது ஜோதிக்கு. பஸ்ஸை விட்டு இறங்கியதுமே ஜோதிக்கு செல்லமுத்து ஞாபகம்தான் வந்தது. கல்யாணமாகி ஆறு மாதம் கழித்து வந்தும்கூட அப்பா, அம்மாவைப் பற்றிக்கூட நினைக்காமல், 'பாவம்... செல்லமுத்து எப்படியிருக்குதோ' என்று நினைத்தாள். கண்களில் நீர் முட்டிக்கொண்டு வந்தது.

செல்லமுத்துக்கும் ஜோதிக்கும் இருந்த காதல் ஊரே அறிந்ததுதான். தோட்டத்தில் விதைப்பானாலும் அறுவடையானாலும் செல்லமுத்து ஜோதியின் அம்மாவிடம்தான் போய் நிற்பான். 'அடப்புக்காட்டுல மக்காச்சோளம் போடலாம்னு இருக்கேன். ஈரம் ரெண்டு நாளைக்குத்தான் தாங்கும். நீங்கதான் எப்படியாச்சும் கூலி சனங்களைக் கூட்டிட்டு வரணும் அக்கா' என்பான். 'எங்கிட்ட சொல்லிட்டீங்க இல்ல மாப்ளே, கவலைய விடுங்க!' என்று அனுப்பி வைப்பாள். மறுநாள் ஆட்களோடு சென்று விதைத்துக் கொடுத்து விட்டு வருவாள்.

ஜோதி டவுன் பள்ளிக்கூடத்தில் படித்து முடித்து ஊருக்கு வந்த சமயம், மழை பொய்த்துப் போனதால் செல்லமுத்து செம்மறியாடுகள் வாங்கி மேய்த்துக் கொண்டிருந்தான்.

மீசைக்கார அய்யனின் யோசனைப் படி ஊர் சனங்கள் கூடி வீடு வீடாய் மழைச்சோறு எடுத்தார்கள். சோற்றுப் பானையை ஊர்ச் சாவடியில் வைத்துப் பிசைந்து உருண்டையாய் உருட்டி தின்று விட்டு, பூவரச மரத்தடி பிள்ளையார் கோயிலில் போய், 'கை கழுவ தண்ணி கொடு சாமீ... கை கழுவ தண்ணி கொடு சாமீ' என்று அழுதார்கள். செல்லமுத்து ஜோதியை மழைச் சோறு எடுக்கும் கூட்டத்தில்தான் முதன் முதலாய்ப் பார்த்தான். அவள் வயதுப் பெண்கள் குளித்தும் குளிக்காமலும் தலை முடியை அலங்கோலமாய் பரவவிட்டு முகத்தில் பஞ்சக் குறிகளுடன் இருக்க, ஜோதி மட்டும் குளித்துத் தலைசீவி பவுடர் பூசி செழுமையாய் இருந்தாள்.

"யார்ரா, அந்தப் பொண்ணு புதுசா இருக்குது..." என்றான் நண்பனிடம் செல்லமுத்து. "அதுவா.. நம்ம ராணியக்காவோட பொண்ணுடா, டவுன்ல சித்தி வீட்ல இருந்து படிச்சுட்டு இப்பத்தான் ஊருக்கு வந்திருக்குது!" என்றான் அவன். செல்லமுத்து, "ராணியக்காவுக்கு இப்படியொரு பொண்ணு இருக்குதா?" என்றான் நம்ப முடியாதவனாக.

மழைச்சோறு எடுத்துங்கூட மழை பெய்தபாடில்லை. ஊர்ப் பெரியவர்கள், "காளியம்மன் கோயில் நோம்பு சாத்தாமல் கிடப்பதால்தான் மழை இல்லை!" என்று காரணம் சொன்னார்கள். சனங்கள் குடத்தை அடி குழாயில் வைத்துத் தவம் கிடந்தார்கள். முந்தியவர்களுக்கு மட்டும் அரை குடமோ, மிஞ்சினால் ஒரு குடமோ நீர் கிடைத்தது. செல்லமுத்து நாற்பது உருப்படி ஆடுகளையும் வைத்துத் தவித்துக்கொண்டு இருந்தான். அவனது கிணற்றில் இருந்த நீர் பத்து உருப்படிகளுக்கு மட்டுமே போதுமானதாய் இருந்தது. ஐம்பது குடம் நீர் இருந்தால்தான் எல்லா ஆடுகளுக்கும் தண்ணி காட்ட முடியும். செல்லமுத்து நேரே ராணியக்காவிடம் போனான். "அக்கா... பைப்புல சுத்தமா தண்ணியே வர்ல, ஆடுக எல்லாம் நா வறண்டு தவிக்குது! தேவத்தூர் பைப்புல போய் கொண்டு வரலாம்னு இருக்கேன். நீங்க ஒத்தாசைக்கு

கோடாங்கிப்பட்டி புகழேந்தி



வந்து அடிச்சுவிட்டா சீக்கிரமா வேலை ஆவும்'' என்றான். ராணியக்கா, ''என்னால பைப்புல அடிக்க முடியாதுப்பா, ஜோதிய வரச் சொல்றேன்... நீ முன்னாடி போ'' என்று அனுப்பிவிட்டாள்.

ஜோதி குடங்களை நிரப்பி சைக்கிளில் ஏற்றி வைக்கவும், செல்லமுத்துவுக்கு வேலை சுலபமாய் இருந்தது. இன்னும் ஒரு மாதம் சமாளித்துப் பார்த்துவிட்டு மழை இல்லாவிட்டால் எல்லா ஆடுகளையும் விற்றுவிடலாமென்று நினைத்தான். இரண்டாவது நடை ஏற்றிவிட்டு ஜோதி, "நீங்க என்ன படிச்சிருக்கீங்க?'' என்று தயங்கிவாறே கேட்டாள். செல்லமுத்து உற்சாகத்துடன், "அஞ்சாவது'' என்றான். ஜோதி, 'களுக்'கென சிரித்தாள்.

மறுநாள் செல்லமுத்து, டீக்கடையில் போண்டா வாங்கி வந்து "இந்தா'' என்று நீட்டினான். ஜோதி தயங்க, ''நாங்க கொடுத்தா வாங்குவீங்களா?'' என்று மெது வாய் முனக, ஜோதி, "ஐயோ... நான் அப்படியெல்லாம் நினைக்கல, சும்மா ஒரு பேச்சுக்குச் சொல்லிப் பார்த்தேன்'' என்றாள் பதறியவாறு.

தொடர்ந்த நாட்களில் செல்லமுத்து டீக்கடையில் போண்டா வாங்கிய கணக்கு ஐந்நூறு ரூபாயை எட்டிவிட்டது. டீக்கடைக்காரர், "கடை வருமானத்த நம்பித்தான் குடும்பமே நடத்தறேன்... இனிமே காசில்லாம போண்டா கேட்காத!'' என்று அனுப்பிவிட்டார். வாட்டத்துடன் வந்து நின்றவனைப் பார்த்து ஜோதி, "என்ன முத்து, போண்டா வாங்கக் காசில்லையா?'' என்று கேட்டாள். செல்லமுத்து தடுமாறி, ''உனக்கு எப்படித் தெரியும்?'' என்று திருப்பிக் கேட்டான். ஜோதி, "ஒரு மாசமா உங்களோட பழகறேன். இதுகூட தெரியாதா? எனக்கு மொதல்லயே தெரியும். நீங்க கடனுக்குத்தான் போண்டா வாங்கிட்டு வர்றீங்கன்னு!'' என்றவள் கையிலிருந்த மோதிரத்தைக் கழட்டி அவனிடம் கொடுத்து, "இதைக் கொண்டுபோய் டவுன்ல அடகு வச்சிட்டு வந்து டீக்கடைல கடனை அடையுங்க, காசு இருக்கும்போது மோதிரத்த மீட்டுக் கொடுத்திருங்க... அம்மாகிட்ட ஏதாவது சொல்லிச் சமாளிச்சுக்கறேன்!''

'திருட்டுப் பயலே' படத்தின் வெற்றியைத் தொடர்ந்து அப்படத்தைத் தயாரித்த ஏ.ஜி.எஸ். எண்டர்டெயின்மெண்ட் நிறுவனம், அடுத்தடுத்து இரண்டு புதிய படங்களைத் தயாரிக்கின்றது. ஒன்றில் 'ஜெயம்' ரவியும் மற்றொன்றில் ஆர்யாவும் நடிக்க ஒப்பந்தமாகியுள்ளனர். இவ்விரு படங்களையும் 'திருட்டுப் பயலே' படத்தை இயக்கிய சுசி.கணேசனே அடுத்தடுத்து இயக்க உள்ளார். கூடவே 'திருட்டுப் பயலே' படத்தை இந்தியில் ரீமேக் செய்வதற்கான வேலையும் இன்னொரு பக்கம் நடந்துகொண்டிருக்கிறது. இதனையும் ஏ.ஜி.எஸ். தயாரிக்க, சுசி.கணேசனே இயக்குகிறார்.



* சுசி. கணேசன்

வரும் டிசம்பர் மாதம் 'திருட்டுப் பயலே' படத்தின் நூற்றைம்பதாவது நாள் வெற்றி விழாவை விமரிசையாகக் கொண்டாட ஏ.ஜி.எஸ். நிறுவனம் தயாராகி வருகிறது. சென்னை வில்லிவாக்கம் ராயல் தியேட்டரை வாங்கி இடித்துப் புதிதாக ஆறு தியேட்டர்களைக் கட்டி வரும் ஏ.ஜி.எஸ் நிறுவனத்தினர், தாம் அடுத்து தயாரிக்கவிருக்கும் படங்களை இத் திரையரங்குகளில் வெளியிட ஆர்வமாக உள்ளனர்.

- காஞ்சனா

என்றாள்.

செல்லமுத்து விலகி விலகிப் போனாலும் ஜோதி விடுவதாயில்லை. ஆடு மேய்த்துக் கொண்டிருந்தவனைத் தேடி அடப்புக்காட்டுக்கு போக ஆரம்பித்தாள். கார்த்திகை மாச கார் மழையும் கைவிட்ட பிறகு செல்லமுத்து ஆடுகளை டெம்போவில் ஏற்றிச் சந்தைக்குக் கொண்டு போனான். திரும்பி வரும்போது ஜோதிக்கு சிறியதாய் ரேடியோ ஒன்றை வாங்கி வந்து தந்தான். ஜோதி அதை வாங்கிக்கொண்டு, ''ஆடுகளை எவ்வளவுக்கு வித்த செல்லமுத்து?'' என்று கேட்டாள். செல்லமுத்து, "எவ்வளவுக்கு வித்து என்ன பிரயோஜனம்? எல்லாப் பணமும் கடன் கட்டவே பத்தாது!'' என்றான் சோர்வாக.

ஊரார், ''உனக்குத் தெரியாததில்ல ராணி... பஞ்சையும் நெருப்பையும் பக்கத்துல வெச்சா என்னாகும்னு... பாத்துக் கண்டிச்சு வச்சுக்க உம் பொண்ண?'' என்று சொல்ல ஆரம்பித்தவுடன்தான் ராணிக்கு உறைக்க ஆரம்பித்தது. "ஜோதி... செல்லமுத்துக்குத் தலைக்கு மேல கடன் கெடக்குது. அவனக் கட்டிக்கிட்டா நீ காலத்துக்கும் ஆடுதான் மேய்க்கணும்! காட்டுல கெடந்து சீரழிஞ்சதெல்லாம் எங்க காலத்தோட போகட்டும். நீ ராணி மாதிரி இருக்கலாம், நாங்க சொல்றபடி கேட்டா! மார்க்கம்பட்டில இருந்து உன்னைப் பொண்ணு கேட்டுட்டு நாலு தடவை வந்துட்டாங்க. மாப்பிள்ளை கேரளாவுல பெரிய வட்டிக்கடையாம்! காரெல்லாம் வச்சிருக்காரு...!'' என்று ஜோதியை மடியில் படுக்க வைத்துக் கண்ணீர் விட்டாள்.

கண்களில் வடிந்த நீரை துடைத்தவாறே வீட்டை நோக்கிப் போன ஜோதி, சாந்தியின் குரல் கேட்டு அப்படியே நின்றாள். மதில் வைத்துக்கட்டிய வீட்டுக்குள்ளிருந்து சாந்தி வெளியே வந்து, "என்ன ஜோதி, நீ மட்டும் வந்திருக்க... உங்க வீட்டுக்காரர் வர்லியா?'' என்று கேட்டாள்.

"அவரு வர்ல விடு... செல்ல முத்து என்னடி பண்ணிட்டிருக்கு?'' என்று அவசரமாய்க் கேட்டாள் ஜோதி.

''உனக்குத் தெரியாதா...? செல்லமுத்துக்குப் பைத்தியம் பிடிச்சுகிச்சுடி! டீக்கடைல போண்டா வாங்கி கண்ட இடத்திலயும் வச்சிட்டுச் சிரிக்குது... ராத்திரியானா தேவத்தூர் அடிபைப்புகிட்ட போய்ப் படுத்துக்குதுடி!"

ஜோதி பொங்கி வந்த அழுகையை அடக்கிக்கொண்டு வீட்டை நோக்கி நடந்தாள், 'வாழ்க்கை மறுபடியும் அடிகுழாயில் தண்ணி அடித்து சைக்கிளில் ஏற்றிவிட்ட நாளில் இருந்து தொடங்காதா?' என்று எண்ணியவாறு. ●

# இது எங்க பக்கம்



இரயில் டிக்கெட் ரிசர்வேஷன் செய்ய வரும் நபர்கள், படிவத்தை எடுக்கும்போதே நான்கைந்து எடுக்கின்றனர். அலட்சியமாக நிரப்பி, சிறு தவறு இருந்தால்கூட அப்படியே கசக்கி எறிந்துவிட்டு, வேறு புதிய படிவத்தை எடுக்கத் தொடங்கி விடுவார்கள். திரும்பும்போது எதற்கும் இருக்கட்டும் என்று நாலு படிவங்களை எடுத்துப் பாக்கெட்டில் வைத்துக்கொள்வது வேறு விஷயம்! தமிழ்நாடு அரசு விரைவுப் போக்குவரத்துக் கழகத்தைப் போல, ரயில்வே துறையும் விண்ணப்பப் படிவத்துக்குக் கட்டணம் வசூலித்தால், பயணிகள் ஒழுக்கத்தைக் கடைபிடிப்பார்களே!

- எம்.ஷேக் அப்துல்லா,
சென்னை - 24

## இனியாவது...

எனக்கு ரமா நியூஸ் பிரிண்ட் பங்கு நிறுவனத்திலிருந்து ஆறு ரூபாய்க்கு காசோலை அனுப்பி உள்ளார்கள். அது ஐந்து ரூபாய் அஞ்சல் உறையில் வந்துள்ளது. இதை வங்கியில் கலெக்ஷனுக்குப் போட்டு நான் எதுவுமே பெற முடியாது. ஆகையால் பங்கு நிறுவனங்களில் முதலீடு செய்பவர்களுக்கு லாபத்தில் பங்கு தரும்போது, 100 ரூபாய்க்குக் குறைவாக உள்ள தொகையினை தற்பொழுது அனுப்பப்படும் காசோலை மூலம் அனுப்பாமல் மணியார்டர் மூலம் அனுப்பினால் சிறு முதலீட்டாளர்களுக்கும் பணம் கிடைக்கும். பங்கு நிறுவனங்கள் இனியாவது ஆவன செய்யுமா?

- சரஸ்வதி இராசேந்திரன்,
மன்னார்குடி

## தாராளமா தாங்க!

கணினியைப் பயன்படுத்தி வரும் கடைகள், அலுவலகங்கள் வாடிக்கையாளர்களுக்குத் தரும் ரசீது, பில்களை போதிய மை இல்லாமல் தெளிவாகத் தெரியாதபடி பெயரளவில் அச்சிட்டுத் தருகின்றனர். பூதக் கண்ணாடி கொண்டுதான் எழுத்துகளைக் காண முடியும். கணினியால் எந்த அளவுக்கு ஆதாயம் பெறுகிறார்களோ அந்த அளவுக்குக் கஞ்சத்தனத்துடன் நடந்துகொள்கிறார்கள். டெலிபோன் பூத்துகளிலும் கிரெடிட் கார்டு பெற்றுக்கொள்ளும் கடைகளிலும் கூட இந்தக் கூத்தைக் காண முடிகிறது. இவர்கள் சற்றே தாரான சிந்தை கொள்ள மாட்டார்களா?

- ஆர். பாமா, மதுரை - 20

# ரயிலே...ரயிலே!

புதிய பகுதி

# என் கடவுள்... என் தோழன்!

சூப்பர் மார்க்கெட்டுக்குப் போகும் வழக்கம் உண்டா, நண்பர்களே? நூறு தினுசு பிரெட், நூறு தினுசு சோப்பு, நூறு தினுசு செல்போன்... எல்லாவற்றிலும் பலப்பல வகைகள். எந்தப் பொருளை வாங்குவது என்ற குழப்பம்தான் மிஞ்சும். வாழ்க்கைத் துணையைக் கண்டுபிடிப்பது போலத்தான் இதுவும்... மனித இனத்தில் ஏறக்குறைய சரிபாதியாக இருப்பவர்களுள் நமக்கு ஏற்ற ஒரே ஓர் ஆணையோ, பெண்ணையோ தேர்ந்தெடுக்க வேண்டும். அது எவ்வளவு கடினமான வேலை!

கடவுளை அறிந்து கொள்வதும் இப்படிப்பட்டதுதான். எக்கச்சக்கமான உருவாக்கங்களும் வடிவங்களும் கொண்டவராயிற்றே.

கடவுளை ஏற்பதைப் பற்றி விஞ்ஞானிகளின் கருத்தரங்கம் ஒன்று நடந்தது. ''மனித சமுதாயத்தைத் தடையின்றி படைக்கத்தான் கடவுள் தேவை. நாம்தான் மனிதப் பிறவிகளைக் கூட 'குளோனிங்' முறையில் உருவாக்கத் துவங்கிவிட்டோமே... இனிமேல் மரங்கள், விலங்குகள், மனிதர்கள் என்று எல்லாவற்றையும் 'குளோனிங்' முறையில் நாமே உருவாக்கிவிடலாம். பிறகு கடவுள் எதற்கு?'' என்று விவாதித்தவர்கள், அவர் இனிமேல் தேவையில்லை என்பதைத் தெரிவிக்க, தங்களுள் ஒருவரைப் பிரதிநிதியாகக் கடவுளிடம் அனுப்புகிறார்கள்.

நேராகக் கடவுளிடம் செல்லும் அந்த விஞ்ஞானி, ''ஐயா, மனிதர்களையும் மிருகங்களையும் மற்றவற்றையும் படைக்கத்தான் நீங்கள் தேவைப்பட்டீர்கள். இனிமேல் உங்களுக்கு வேலை இல்லை! எனவே உங்களை நீக்க விரும்புகிறோம்'' என்கிறார். அவர் சொல்வதைப் பொறுமையுடன் கேட்கும் கடவுள், ''அதெல்லாம் சரிதான்... நான் தேவையில்லை என்று ஏன் நினைக்கிறீர்கள்?'' என்று கேட்க, ''ஏனென்றால் மனிதர்களை



# உற்சாகத் தொடர்...



இரண்டாக, நான்காகப் பெருக்க எங்களாலேயே முடியும்" என்று பதில் வருகிறது.

''அப்படியானால், ஒரு போட்டி வைப்போமா? நாம் ஆளுக்கொரு மனிதனை உருவாக்குவோம்... யாருடைய படைப்பு சிறப்பாக இருக்கிறதென்று பார்க்கலாம்! சும்மா விளையாட்டுக்குத்தான்..." என்றார் கடவுள். சவாலை அந்த விஞ்ஞானி ஏற்றுக் கொள்கிறார்.

"தொடக்கத்தில் நான் செய்ததைப் போல இப்போதும் ஆரம்பிப்போம்.." என்ற கடவுள், கீழே குனிந்து கொஞ்சம் களிமண்ணை எடுக்கிறார். மண்ணைக் கொண்டுதான் கடவுள் மனிதனைப் படைத்தார் என்பதுதானே கதை? எனவே அவர் மண்ணை எடுக்க, விஞ்ஞானியும் குனிந்து களிமண்ணை எடுக்கிறார். "இல்லையில்லை... இதை அனுமதிக்க முடியாது. என் களிமண்ணைக் கொண்டு நீங்கள் மனிதனை உருவாக்கப் பார்க்கிறீர்கள். நீங்கள் போய் உங்கள் களிமண்ணைக் கொண்டு வாருங்கள்'' என்று கடவுள் மறுக்க, விஞ்ஞானி திகைக்கிறார்.

உண்மைதானே! கடவுளை மறுக்கக்கூட கடவுளுக்குச் சொந்தமானதைத் தானே உபயோகிக்க வேண்டியிருக்கிறது!

**க**டவுளைப் பற்றிய இன்னொரு பார்வை, உணர்ச்சிபூர்வமானது! அவருக்காகக் கண் கலங்கி யாசிக்கும் மக்களைக் கொண்டது அது. இந்தப் பக்தர்கள் எப்போதுமே வேதனையில் இருப்பவர்கள். சௌக்கியமாக இருக்கும் பக்தர் ஒருவரைக்கூட நாம் பார்க்க முடியாது. இப்படிப்பட்ட பக்தர் ஒரு விதத்தில் கையாலாகாத, முதுகெலும்பற்ற மனிதர்.. கடவுள் தனக்கு இதைச் செய்யவில்லை, அதைக் கொடுக்கவில்லை என்று சதா புகார் கூறிக் கொண்டிருப்பவர். கடவுளை ஒரு சுமைதாங்கியாகப் பாவித்து, எது தவறாகப் போனாலும், சரியாக நடந்தாலும், "எல்லாம் அவன் செயல்!" என்று அவர் மீது சுமத்திவிடுவார்.

பக்தர் ஒருவர் ஒரு சமயம், "துக்கம் நிகழ்ந்தபோது நான் தனியாகத்தான் இருந்தேன்... நீ எங்கே போயிருந்தாய், கடவுளே?" என்று புகார் படிக்கிறார். தாமே எல்லாவற்றையும் சுமக்க வேண்டியிருந்ததே என்று அவருக்குக் கடவுளிடம் கோபம். "என் நேரம் நன்றாக இருந்தபோது என்னோடு வந்தாய்... எனக்குக் கெட்ட நேரம் வந்தபோது தனியாகத்தான் இருக்க வேண்டியிருந்தது. அப்போது என்னை விட்டுவிட்டுப் போய்விட்டாயே?" என்று புலம்புகிறார். "அப்படியல்ல மகனே.. நீ நடந்து வந்த பாதையைத் திரும்பிப் பார்த்தால், உனக்குக் கஷ்டம் வந்தபோது ஒரு ஜோடிக் காலடித் தடங்கள்தான் இருந்திருக்கும். அவை என்னுடை

சுவாமி சுத்தானந்தா

**'என் கடவுள்... என் தோழன்' கட்டுரை மொழிபெயர்ப்பாளர் சிவசங்கரி என்ன சொல்கிறார்?**



"கணவரைப் பிரிந்த துக்கச் சுமையைச் சுமந்துகொண்டு முதன் முதலில் சுவாமிஜியை நான் சந்தித்தபோது, 'மளிகைச் சாமான் வேண்டுமென்றால் அவை விற்கப்படும் கடைக்கு, காய்கறி பழம் தேவையென்றால் அவை கிட்டும் இடத்துக்கு, வீட்டுச் சாமான்கள் வாங்க வேண்டுமென்றால் அந்தந்த கடைகளுக்குப் போவோம்; சந்தோஷம் வேண்டுமென்றால்...?' என்று கண்கள் மின்ன என்னைத் தீர்க்கமாகப் பார்த்துக் கேட்டவர், கொஞ்சம் தாமதித்து, புன்னகையுடன், 'எத்தனை பணம் கொடுத்தாலும் சந்தோஷத்தை எங்கும் வாங்க முடியாது; ஏனென்றால், அதற்கு வெளி விலாசம் கிடையாது' என்றார்.

'ஆனந்தமும் நிறைவும் நமக்குள்ளே இருக்கிறது' என்ற வாதத்தில் சுவாமிக்கு உடன்பாடு இல்லை. 'உள்ளே என்பது தவறு; நம் ஒவ்வொருவரின் இயற்கை குணமே அதுதான் என்பதால், 'நாமே சந்தோஷம்' என்பதே சரி' என்பார்.

'தன் மாணவர்களுக்குச் சிந்தனைகளைத் தராமல், எப்படிச் சிந்திக்க வேண்டும் என்று கற்றுத் தருபவரே நல்ல ஆசிரியர். A good teacher will teach his students how to think, not give them thoughts....' என்பார் சுவாமிஜி அடிக்கடி. அப்படியொரு குரு எனக்குக் கிட்டியது நான் செய்த பாக்கியம்!"

யவை. ஏனென்றால், அப்போது நான் உன்னைச் சுமந்துகொண்டிருந்தேன்" என்ற இறைவன் பதில் கூறியதும், பக்தருக்குப் பரமதிருப்தி!

பக்தர் என்பவர் இப்படிப்பட்டவர்தான். கடவுளிடம் சண்டை போடவோ, அவரை ஏற்கவோ, மறுக்கவோகூட பக்தருக்கு நேரமில்லை. நம்பிக்கையுடையவரிடம், கடவுளின் இருப்பைப் பற்றி நீங்கள் விவாதிக்கத் துவங்கினால், அவருக்குச் சங்கடமாகிவிடும். அவருக்குள்ள கொஞ்ச நஞ்ச நம்பிக்கையும் மறைந்து போய்விடும்.

**க**டவுளையே குழப்புபவரைக் கொண்டது, மூன்றாவது வகை. இறந்த பின் சொர்க்கத்துக்குச் செல்லும் ஒருவர், "அதற்குள்ளாகவா எனக்கு நேரம் வந்துவிட்டது?" என்று கடவுளைக் கேட்கிறார். அவருக்கு ஏற்பட்ட இறப்பு எதிர்பாராதது. இருதய அறுவை சிகிச்சை நடந்துகொண்டிருந்தபோது, அவரது உயிர் பிரிந்துவிட்டது. "இல்லை, உன் காலம் இன்னும் முடியவில்லை. உனக்கு இன்னும் 43 ஆண்டுகள், 23 நாட்கள், 20 மணிகள், 59 நிமிடங்கள் இருக்கின்றன..." என்கிறார் கடவுள்.

தம் உடலுக்குள் மறுபடி புகுந்துகொள்ளும் அந்த மனிதர், 'மருத்துவமனைக்கு வந்தது வந்தாயிற்று... அதற்குள் வீடு திரும்புவானேன்? கொழுப்பைக் குறைத்து, முகத்தைச் சீரமைத்துக்கொண்டு, மற்ற அழகு சிகிச்சைகளையும் முடித்துக்கொண்டே போவோமே!' என்று மேலும் ஒரு மாதம் தங்கி, புதுப்பொலிவு பெறுகிறார்.

பிறகு ஒரு நாள் அவர் தெருவில் நடந்து செல்கையில், கார் மோதி உயிர் பிரிய, மறுபடி கடவுளின் முன் வந்து நிற்கிறார். "நீங்கள் செய்தது நியாயமா? என் காலம் முடிய இன்னும் 43 ஆண்டுகளும் சொச்சமும் இருப்பதாகச் சொன்னதால்தானே எல்லா அறுவை சிகிச்சைகளையும் செய்துகொண்டேன்... இப்போது விபத்தில் உயிரை இழந்துவிட்டேனே... அந்த விபத்திலிருந்து என்னை ஏன் நீங்கள் காப்பாற்றவில்லை?' என்று கோபமாகக் கேட்க, "சிகிச்சையில் உன் உருவமே ரொம்ப மாறியிருந்ததால் எனக்கு அடையாளம் தெரியாமல் போய்விட்டது!" என்று பதிலளிக்கிறாராம் கடவுள்! இப்படித்தான் சிலர் கடவுளைக் கூடக் குழப்பிவிடுகிறார்கள்.

கடவுள் எந்த அர்த்தத்தில் சொன்னார் என்பதைக்கூட புரிந்துகொள்ளாமல் அவரது ஒவ்வொரு வார்த்தையையும் அப்பட்டமாய் ஏற்கும் சில துறவிகள் இன்னொரு வகையினர்.

அவர்களைப் பற்றி அடுத்த வாரம் பார்ப்போம்.

*(பேசலாம்)*

## புத்தக விமர்சனம்



# முன்னேற்றத்துக்கு முன்னுரை!

**கா**தல் சிறகுகள் - மு.மாறன் - ராம்பிரசாந்த் பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14 - 96 பக்கங்கள் - விலை ரூ.60/-

இன்று இலக்கியம், நடிப்பு, தொழில் என பல்வேறு துறைகளில் ஜாம்பவான்களாக இருப்பவர்களின் பதினாறு வயதுப் பருவத்தைக் கிளறிப் பார்க்கும் காதல் அனுபவங்களின் தொகுப்பு. பக்கத்துக்குப் பக்கம் வண்ணமாய், உயர்தரமான தாளில் அச்சிடப்பட்டுள்ளது. கல்கியில் தொடராக வந்தது என்பது மற்றொரு சிறப்பு.




**எ**னக்கும் ஒரு கனவு - வர்கீஸ் குரியன்; தமிழில் - மு. சிவலிங்கம், கண்ணதாசன் பதிப்பகம், 23, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17, 412 பக்கங்கள் - விலை ரூ.150/-



டாக்டர் வர்கீஸ் குரியன் அமுல் பால் பண்ணை நிறுவியதில் எதிர்கொண்ட சவால்கள், சாதனைகள், ஏமாற்றங்கள், சோதனைகளை விவரிக்கும் புத்தகம். மு.சிவலிங்கத்தின் தமிழாக்கம் செறிவு நிறைந்ததாக உள்ளது. நல்ல கட்டுமானத்தைக் கொண்ட இந்நூல், கொடுக்கும் பணத்துக்குத் தகுதியானது. முன்னேற்றத்துக்கு நிச்சயம் முன்னுரையாக அமையும்.

**வி**ழி திறந்தது வழி பிறந்தது. தா.பாண்டியன் - குமரன் பதிப்பகம் - 3, முத்துக்கிருஷ்ணன் தெரு, தி.நகர், சென்னை -17, 144 பக்கங்கள், விலை ரூ.60/-

1961 முதல் 64 வரையிலான இந்திய உலக அரசியலை எடுத்துச் சொல்லும் கட்டுரைகள். இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலச் செயலாளர் தா.பாண்டியன், 'ஜனசக்தி' பத்திரிகையில் எழுதியதன் தொகுப்பு. தைரியமான விமர்சனமும் சரளமான எழுத்து நடையும் ஒரே மூச்சில் படிக்கத் தூண்டுகின்றன.

- யுவா

"நானொரு குட்டி இளவரசி!" என்கிறார் அசின். 'எப்படி!' என்று கேட்டால், "வந்து என் வீட்ல பாருங்க. ஒவ்வொருத்தரும் எப்படி என்னைத் தாங்கறாங்கன்னு. அம்மாலேர்ந்து அம்மிக் குழவி வரைக்கும் நான் வச்சதுதான் சட்டம்; நான் சொல்றதுதான் தீர்ப்பு!" என்று நாட்டாமை ரேஞ்சுக்குப் படபடக்கிறார். 'அப்ப யாருகிட்டயுமே பயம் இல்லையா?' என்றால், "நான் அப்படிச் சொன்னேனா?" என்று பின்வாங்கியவர்,

"மிஸ்டர் கரப்பானும் பல்லியும்தான் என்னைத் துள்ளியோட வைக்குற கெட்டப் பசங்க" என்று கூறி, சட்டென்று சினிமா பக்கம் தாவிவிட்டார்.

"இன்னைக்கு ஃபீல்டுல இருக்குற பெரிய ஹீரோக்கள் பலரோடயும் இந்தக் குறுகிய காலத்துல நடிச்சுட்டது ரொம்ப சந்தோஷமாயிருக்கு. 'கஜினி' படம் என்னை அடுத்த கட்டத்துக்குக் கூட்டிட்டுப் போயிடுச்சு. இப்ப தமிழ்ல என்கிட்ட ரொம்ப எதிர்பார்க்குறாங்க. அதைப் பூர்த்தி செய்ய வேண்டிய கட்டாயமும் எனக்கிருக்கு" என்றவரிடம் 'உங்க ஹீரோக்களைப் பத்திச் சொல்லுங்களேன்' என்றதுமே குஷியாகிவிட்டார்.

"ஆர்யா, ஷாம் கூடத்தான் என் என்ட்ரி. 'உள்ளம் கேட்குமே' பண்ணும்போது ஒவ்வொரு நாளும்





காலேஜ் போயிட்டு வர்ற மாதிரிதான் ஃபீல் பண்ணேன். இன்னைக்கு ஆர்யா பெரிய ஹீரோ. சீக்கிரமே அவருக்கு ஜோடியா நடிக்குற சான்ஸ் வரும்னு நம்பறேன். அப்பவே அவர் கண்ணுல ஒளி வட்டம் தெரிஞ்சது; தெரியுது. ஷாமையும் குறைச்சு மதிப்பிட முடியாது. அவரோட லேட்டஸ்ட் 'மனதோடு மழைக்காலம்' பார்த்தேன். நடிப்புல பின்னியிருந்தார்.

ஜெயம் ரவி ரொம்ப ஜாலி டைப். 'குமரன் சன் ஆஃப் மஹாலக்ஷ்மி' அவங்க குடும்பப் படம். இருந்தாலும் எந்தவிதமான 'டேமச்' உரிமையும் எடுத்துக்காம பயபக்தியோட நடிச்சார். அவரோட தொழில் சிரத்தையைப் பார்த்து நான் பல தடவை பிரமிச்சிருக்கேன். நல்ல பொசிஷனுக்கு வர்றதுக்கு அவர் கொடுத்த விலை கொஞ்ச நஞ்சமல்ல. இன்னமும் மேலே வருவார், பாருங்க.

விக்ரம் சார் பெரிய ஆக்டர். ஆளு கொஞ்சம் குள்ளம்னாலும் மனசு தங்கம். 'நீ லைட்பாய்.. நான் ஆர்ட்டிஸ்ட்'னு எந்தப் பாகுபாடும் இல்லாம ஒரே மாதிரி எல்லார்கிட்டயும் பழகுறதுதான் அவரோட ஸ்பெஷாலிட்டி. 'சேது', 'பிதாமகன்' பார்த்து நொந்தே போயிட்டேன்.. 'எப்படியா இந்த மனுஷன் இப்படிப் பொளந்து கட்றார்'னு. அதை நேர்லேயே பல தடவை கேட்டுட்டேன். சிரிப்புதான் பதிலா வருது.

**ஜோ** ஹஸ்பெண்ட் கணவர் சூர்யா மேல எனக்குக் கொஞ்சம் கோபம். பின்ன என்னங்க, 'கஜினி' படத்தப்போ எப்பவும் அவருக்குத் தொழில் சிந்தனை. படத்தை எப்படி அடுத்த ஸ்டேஜுக்குக் கொண்டு போகலாம், தன் நடிப்புல எப்படி அடுத்த பரிமாணத்தை அடையலாம்னு எப்பவும் சினிமா... சினிமா... சினிமாதான்... அப்பாவோட ட்ரெய்னிங் போல.. எந்த போன் வந்தாலும் வேலை நேரத்துல அட்டென் பண்ண மாட்டார். பாவம், ஜோ பண்ணாலும் இதே கதிதான் போல.

விஜய் கூலான ஆளு. அலட்டிக்காதவர். இது சரியில்லையா, அது பண்ணலாம்; அது சரியில்லையா, இது பண்ணலாம்னு அடுத்து அடுத்துன்னு போய்க்கிட்டே இருப்பார். 'மனசிருந்தா மார்க்கமுண்டு'ன்னு தத்துவம் பேசுவார். யோசிச்சுப் பார்த்தா, அவர் சொல்ற பல விஷயங்கள் உண்மையாத்தான் இருக்கும்.

நம்ம ஆழ்வார் இருக்காருல்ல... அதாங்க 'தல' அஜீத்தை நம்பி என்ன வேணா பேசலாம். எல்லாத்தையும் மனசுல வெச்சுப்பார். தேவையில்லாம அடுத்தவங்க விஷயத்துல மூக்க நுழைக்க மாட்டார். மனுஷ உணர்வுகளுக்கு முக்கியத்துவம் தர்ற ஈரமுள்ள ஆளு.

கமல் சாரைப் பத்தி 'தசாவதாரம்' படம் முடிஞ்சதும்தான் யோசிக்கணும். அதுவரைக்கும் அவரைப் பத்தின ஞாபகங்களைச் சேகரிச்சு வச்சுக்கிட்டே வர்றேன்" என்று எழுந்தவரிடம்,

'என்னங்க சூப்பர் ஸ்டாரைப் பத்தி சொல்லவே இல்லையே' என்றோம்.

"அவரு மட்டுமில்ல, நான் ஒரு தடவை சொன்னாலும் நூறு தடவை சொல்ற மாதிரிதான்...

தமிழகத்தோட ஒரே நிரந்தர ஸ்டார் நம்ம சூப்பர் ஸ்டார்தான்!"

**- எஸ்.ஷெரீனா**

ரியும்
ம்!

ஆற்றங்கரைகளுக்கு அடுத்தபடியாக இப்போதெல்லாம் ரயில் கரைகளில் நமது புராதன நாகரிகம் வளர்ந்து வருகிறதென்பதை நேயர்கள் கவனித்திருக்கலாம். காலை நேரத்தில் ஊர்ப்புறங்கள் அல்லது பட்டணக்கரைகளுக்குச் சமீபமாக ரயில் போகுங்காலத்தில் பிரயாணம் செய்திருப்பவர்கள் இந்த உண்மையை நிச்சயம் அறிந்திருப்பார்கள். ஆனால் இதைப் பற்றி அதிகமாய் நான் விஸ்தரித்தால் நீங்கள் கோபித்துக் கொள்வீர்கள். வேண்டாம், விட்டு விடுகிறேன்.

காலை நேரத்தில் ரயில் பிரயாணம் செய்ய நேர்ந்தால், கண்ணை மூடிக் கொண்டால் போகிறது அல்லது ஜன்னல் கதவுகளை இறுக்கி மூடிவிடலாம். இல்லாவிட்டாலும், ஒரு நிமிஷத்தில் இன்னார், இனியார் என்று தெரிவதற்கு முன் தாண்டிப்போய் விடுகிறோம். ஆனால் வீதியோடு போகிற கனவான் திடீரென்று சொல்லாமல் கொள்ளாமல் உங்கள் வீட்டுச் சுவர் ஓரத்தில் உட்கார்ந்தால், என்ன ஐயா செய்வீர்கள்?

இந்த மாதிரி நெருக்கடி சில தினங்களுக்கு முன் என்னுடைய சிநேகிதர் வீட்டருகில் ஏற்பட்டது. மேல்மாடித் தாழ்வாரத்தில் அவர் உலாவிக் கொண்டிருந்தார். தெருவோடு



**"அவருக்கு என்ன அவசரமோ? அப்படி பயமுறுத்தி விட்டீர்களே!"**

## அமரர் கல்கி



# வடையா... துளையா?

போன ஒரு மனிதன் திடீரென்று காம்பவுண்டுச் சுவர் ஓரத்தில் உட்கார்ந்ததைப் பார்த்துவிட்டார். "டெடெ டெ டேய்!" என்று ஒரு கூச்சல் போட்டார். பாவம், உட்கார்ந்த மனுஷன் அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்து போனான். அவன் இவரைப் பற்றி என்ன நினைப்பான்? "சுத்த அதிகப் பிரசங்கி!" என்று எண்ணிக்கொண்டு போயிருக்க மாட்டானா? நான்கூட "என்ன, ஸ்வாமி! பிறருடைய சௌரியா சௌகரியங்களைக் கொஞ்சமாவது கவனிக்க வேண்டாமா? அவருக்கு என்ன அவசரமோ, இப்படிப் பயமுறுத்திவிட்டீர்களே?" என்றேன். கொஞ்சமாவது இவர் பச்சாதாபப்படவில்லை.

இந்தச் சிநேகிதரைப் போன்ற மனிதர்கள் நமது சமூகத்தில் பழகுவதற்கே லாயக்கில்லாதவர்கள். இவர்களுக்கு இடங்கொடுத்தால் என்ன செய்வார்கள் தெரியுமா? ஏன்? மனுஷன் மூக்குச் சிந்துவதைக் கூடத் தடுத்துவிடுவார்கள். "மூக்குச் சிந்துவதாயிருந்தால் கைக்குட்டை வைத்துக் கொள்ள வேண்டும்; இல்லாவிட்டால், மேல் வேஷ்டியிலாவது துடைத்துக் கொள்ளட்டும்; தரையில் மட்டும் சளியைப் போடக்கூடாது" என்றுகூட கூசாமல் சொல்வார்கள்!

இப்படியெல்லாம் 'சுத்தம் - அசுத்தம்' என்னும் பேத பாவங்கொண்ட உலகாயதர்கள் நம்முடைய திருக்கோயில்களைப் பற்றிக்கூட அந்தப் பேச்சைத் தொடங்கி விடுகிறார்கள்! நமது கோயில்கள் சுத்தமாக வைக்கப்படுவதில்லையென்பது இவர்களுடைய புகார்! லக்ஷணமாயிருக்கிறதல்லவா? ஒரு தடவை பிரசித்தி பெற்ற புராதன ஆலயம் ஒன்றுக்குச் சென்றிருந்தோம். அந்தக் கோயிலை சிவ பக்தியில் சிறந்த ஒரு வணிகர் பத்து லட்ச ரூபாய் செலவிட்டுப் புதுப்பித்திருந்தார். சிற்ப வேலைகள் எல்லாம் வெகு அபூர்வமாயிருந்தன. சுவாமியோ மகாசக்தி வாய்ந்தவர். ஆனால் என்னுடன் கூடவந்த மனிதருக்கு இதிலெல்லாம் கவனம் செல்லவில்லை. கோபுர வாசலிலும், பிராகாரங்களிலும், மண்டபங்களிலும் இருந்த ஆபாசங்களின் மீதே அவர் கருத்துச் சென்றது. விஷயம் என்னமோ வாஸ்தவந்தான். ஓரிடத்தில் குப்பை; இன்னோரிடத்தில் கூளம்; அங்கே பார்த்தால் மாட்டுச் சாணம்; இங்கே நோக்கினால் யானை லத்தி; எங்கே பார்த்தாலும் புழுதி; அழுகிய நிர்மால்யங்கள்; விதவிதமான பிரஸாத சேஷங்கள்; தூண்களில் எல்லாம் எண்ணெய்க் கை துடைத்த சின்னங்கள்; சுண்ணாம்பு விரல் அடையாளங்கள் - எல்லாம் நிஜந்தான். ஆனால், வடையை எண்ணச் சொன்னார்களா, தொளையை எண்ணச் சொன்னார்களா என்பது போல, கோயிலுக்குப் போனால் உங்களை ஸ்வாமி தரிசனம் பண்ணச் சொன்னார்களா, குப்பை கூளத்தைப் பார்க்கச் சொன்னார்களா? அப்படிப் பார்த்தாலும் "சுத்தம்-அசுத்தம்" என்னும் வேற்றுமை உணர்ச்சியைப் போக்கிக்கொள்ள அவற்றைச் சாதனமாகக் கொள்வதுதானே நியாயம்? இத்தகைய வேதாந்த ஞானத்தைக் கோயிலில் நாம் அடையாவிட்டால், வேறு எங்கேதான் அடைவது?

- வானதி பதிப்பகத்தின்
'அதிர்ஷ்ட கவசம்' நூலிலிருந்து..

# கல்யாண்குமார்

சத்தியமங்கலம் என்றதுமே பலருக்கும் வீரப்பன்தான் ஞாபகம் வருவான். ஆனால், எனக்கு என் பால்ய சினேகிதன் ராமசாமிதான் நினைவுக்கு வருவான். அந்த ஊர்ப் பள்ளிக்கூடத்தில் நானும் அவனும் ஒன்பதாம் வகுப்பிலிருந்து பதினொன்றாம் வகுப்புவரை ஒன்றாய்ப் படித்தவர்கள். ஒரே வகுப்பு, ஒரே பென்ச்.

என் அப்பா அப்போது ஓர் அரசாங்க அதிகாரி. மூன்று வருடங்களுக்கொரு முறை மாறுதல் வரும். சத்தியமங்கலத்தில் கழித்த அந்த மூன்று வருடங்களில் தினமும் என்னைப் பள்ளிக்கூடத்தில் விட்டுப் போக, மாலையில் அழைத்துப் போக-அப்பாவின் ஆபீஸ் ஜீப் வந்துவிடும். ஆனால் ராமசாமி ஒரு பழைய சைக்கிளில்தான் வருவான், போவான். எனக்கு அந்த சைக்கிளை ஓட்டிப் பார்க்க அவ்வளவு ஆசை! விளையாட்டு பீரியடில் கிரவுண்டில் ஆசை தீர ஓட்டிப் பார்க்க ராமசாமி அனுமதிப்பான். அதன்பிறகு மாலை அவன் சைக்கிளிலும், நான் ஜீப்பிலுமாகப் பிரிந்து விடுவோம்.

அவனது வீடு அந்த ஊரிலிருந்து சுமார் ஐந்து கிலோ மீட்டரில் இருந்தது. அதுகூட ரொம்ப நாள் கழித்துத்தான் எனக்குத் தெரியும். ஒரு நாள் பேச்சுவாக்கில் தமது வீட்டில் நடக்கவிருக்கும் ஏதோ விசேஷத்துக்கு என்னை அழைத்தவன், 'நீயெல்லாம் அவ்வளவு தூரம் வரமாட்டே' என்று தனக்குததானே சமாதானம் செய்து கொண்டான். அது எனக்கு, என்னவோ மாதிரி இருந்தது. 'இல்ல, நான் வருவேன்!' என்றேன் உறுதியாக.

ஆனால் அப்பாவிடம் சொன்னால் திட்டுவார். 'மறுநாள் ஸ்பெஷல் கிளாஸ் இருக்கிறது. வர லேட்டாகும். ஜீப் அனுப்ப வேண்டாம்' என்று சொல்லிவிட்டு வாடகை சைக்கிள் எடுத்துக் கொண்டு ஸ்கூல் விட்டதும் ராமசாமியோடு சைக்கிள் பயணம்! மாட்டு வண்டி போகிற மண் பாதை. போய்க்கொண்டே இருக்கிறது. கால்களில் வலி. எப்படி இவன் காலையிலும் மாலையிலும் வந்து போகிறான்? வலியைக் காட்டிக் கொள்ளாமல் ஒரு வழியாய் அவனது பெரியகுளம் கிராமத்துக்குப் போயாகி



**போட்டிக் கதை**



விட்டது. ராமசாமி என்னை அவனது குடும்பத்தாரிடம் அறிமுகம் செய்து வைத்தான். அவனது அக்காவுக்குத் திருமண நிச்சயதார்த்தம் நடந்து கொண்டிருந்தது. ஏகப்பட்ட விருந்தினர்கள்.

விழா முடிந்தபோது இருட்டிவிட்டது. எனக்குத் துணையாக மறுபடி ராமசாமி சைக்கிளை எடுத்துக்கொண்டு திரும்ப சத்தியமங்கலம் வந்து என்னைப் பத்திரமாக என் வீடுவரை விட்டுவிட்டுப் போனான்.

அதன்பிறகு அவனைக் காரணம் காட்டி அப்பாவிடம் சொல்லி 'இனிமே ஜீப்பெல்லாம் அனுப்ப வேண்டாம் எனக்கு ஒரு சைக்கிள் வாங்கிக் கொடுங்கள்' என்று அடம் பிடித்து வாங்கியாயிற்று. சைக்கிள் வந்த பிறகு எங்கள் நட்பு மேலும் இறுக்கமானது. எனக்காக அவன்தான் எப்போதும் செலவு செய்வான். எனக்கு என்ன வேண்டுமோ அதை வாங்கிக் கொடுக்காமல் விடமாட்டான். பேனா, ஜாமெண்ட்ரி பாக்ஸ், மேப்ஸ், அட்லஸ் என்று எல்லாமே இரண்டாகத்தான் வாங்குவான். ஏனோ தெரியவில்லை. கடைசிவரை எங்களுக்குள் வேறு நண்பர்களே நுழையவில்லை.

பதினொன்றாம் வகுப்பில் நான் பாஸாகிவிட, அவன் ஃபெயில்! பாஸானவன் ஃபெயிலானவனைப் போய்ப் பார்த்தால் அது துக்கம் விசாரித்தது போலாகிவிடுமே என்று நான் அவனது கிராமத்துக்குப் போவதைத் தள்ளிப் போட்டேன். சத்தியில் எங்காவது மார்க்கெட், சினிமா தியேட்டர்களில் தென்படுகிறானா என்று தினமும் அலைந்து பார்த்தேன். நாங்கள் வழக்கமாகப் பார்க்கும் நிர்மலா தியேட்டரில் சனிக்கிழமை மேட்னி ஷோக்களிலும் அவனைப் பார்க்க முடியவில்லை.

ராமசாமி அதன்பிறகு பார்க்கவே முடியாத பெயராகிப் போனான். அப்பாவுக்கு வேறு மாவட்டத்துக்கு மாறுதல், கல்லூரிப் படிப்பு முடிந்த கையோடு அதிக சம்பளத்தில் கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் கம்பெனியில் வேலை, வெளிநாட்டுப் பயணங்கள், கல்யாணம், குழந்தைகள்...

**கோ**யம்புத்தூரில் நடந்த ஒரு செமினாரை முடித்துக்கொண்டு ராமசாமி

# எந்நாளும் மேன்மக்கள்...

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை**

யைப் பார்க்கத் தனியாகக் கிளம்பினேன். காரெல்லாம் வேண்டாம் என்று அதே பழைய பஸ் பயணம். இதோ சத்திய மங்கலம்! அங்கிருந்து டவுன் பஸ்ஸில் பெரியகுளம் கிராமம். அன்று சைக்கிளில் ஒரு மணி நேரப் பயணம், இப்போது பஸ்ஸில் பதினைந்து நிமிஷமாகியிருந்தது. மண் ரோடுகள் தார் பூசிக்கொண் டிருந்தன.

பழைய நினைவில் அந்தத் தோட்டத்தைச் சுலபமாகக் கண்டுபிடிக்க முடிந்தது. கேபிள் கனெக்ஷனுக்கான பெரிய இரும்புக் குடையொன்று வாய் பிளந்து வானம் பார்த்துக் கொண்டிருந்தது. மற்றபடி எந்தவித மாற்றமுமின்றி ராமசாமி வீட்டுத் தோட்டம். நாய் ஒன்று குரைத்தது. என்னைப் பார்த்து. சத்தம் கேட்டு ஒரு சிறுமி எட்டிப் பார்த்தாள்.

"யாரோ வந்திருக்காங்க" உள்ளே பார்த்துக் குரல் கொடுத்தாள்.

ராமசாமியின் மகளாயிருக்குமோ? இல்லை, அவனது அக்கா குழந்தையாக இருக்கலாம். ராமசாமியோ அல்லது ராமசாமியின் அப்பாவோ வரப் போகிறார் என்று மூங்கில் கேட்டருகே காத்திருந்தேன். வந்தது ராமசாமியேதான்! வயதாகிப் போயிருந்தான்.



## விருது நிச்சயம்!

என்னை அவனுக்கு அடையாளம் தெரியவில்லை. பேண்ட் சட்டையில் இருந்ததால் ஏதோ அரசாங்க அதிகாரி என்று நினைத்துக் கொண்டான்.

"என்ன விஷயம், சார்?" என்றான்.

அவனை அடையாளம் கண்டு கொண்ட சந்தோஷத்தில் நான் சிரித்தேன். அவன் குழப்பமாக முகம் பார்த்தான்.

"என்னைத் தெரியலையா, ராமசாமி?"

உற்றுப் பார்த்தவன் முகத்தில் ஏகப்பட்ட மகிழ்ச்சி.

"அட, குமாரா...? வா... வா... வா..." என்று கேட்டின் தாழ்ப்பாளை நீக்கினான்.

பல வருட தடையை அவன் திறந்து விட்டது போலிருந்தது. அவனுக்காக வாங்கி வைத்திருந்த செல்போன், குழந்தைகளுக்கான வெளிநாட்டு பிஸ்கட், சாக்லெட் பாக்கெட்டுகள் இருந்த பேக் என் தோளில் பெருமிதமாக உட்கார்ந்திருந்தது. இன்னும் கொஞ்ச நேரத்தில் அவனைத் திக்குமுக்காட வைத்துவிட வேண்டும்!

உள்ளே நுழைந்ததும் செம்பில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தான். அந்தச் சிறுமி தூண் மறைவில் ஒளிந்து கொண்டு என்னை ஆச்சர்யத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

பழைய கதைகளைப் பேச ஆரம்பித்தோம். பதினொன்றாம் வகுப்பு ரிஸல்ட்டுக்குப் பின்னால் அவனுக்கு அம்மை போட்டிருந்ததையும் அதனால் வெளியே எங்கேயும் வர முடியாததையும் அதன் பிறகு அவன் தேடி வந்தபோது என் அப்பா குடும்பத்தோடு வெளியூருக்கு மாறிப் போய்விட்டதையும் சொல்லி வருத்தப்பட்டான். சில வருடங்களில் கல்யாணம் செய்துகொண்டு விவசாயத்தில் கவனம் செலுத்தியதையும், பாம்பு கடித்து அவன் அப்பா இறந்ததையும் ஒரு படம் போலச் சொல்லிக்கொண்டு வந்தான்.

படத்தின் இரண்டாம் பகுதியாக சின்ன வயதிலேயே கல்யாணம் நடந்ததையும், பிறந்த ஒரே மகனுக்கும் என் நினைவாக குமார் என்று பெயரிட்டதையும் சொல்லி என்னை நெகிழ வைத்தான்.

தாம் படிக்க முடியாவிட்டாலும் தன் மகனை நன்றாகப் படிக்க வைத்திருப்பதாகவும் அவன் இப்போது அமெரிக்கா

வில் ஏதோ ஒரு பெரிய கம்பெனியில் வேலை பார்ப்பதாகவும் சொல்லி, மகனின் விசிட்டிங் கார்டை ஒரு டைரியிலிருந்து கொண்டு வந்து கொடுத்தான்.

அட! எங்கள் கம்பெனி! இங்கிருந்து நாங்கள் ஏற்றுமதி செய்யும் கம்ப்யூட்டர் சாப்ட்வேரை அமெரிக்காவில் இறக்குமதி செய்துகொள்ளும் அதே அமெரிக்க நிறுவனம். விதி எப்படியெல்லாம் இணைக்கிறது? ராமசாமியின் மகனுக்கும் எனக்கும் ஏதோவொரு வகையில் சம்பந்தம் ஏற்கெனவே இருந்திருக்கிறது. இதைச் சொன்னதும் ராமசாமியும் ஆச்சர்யப்பட்டான்.

"படிச்சவங்க எப்படியாவது, எங்கியா

விட்டுப் போனதாகச் சொன்னவன், அதிலிருந்து செல்போன் ஒன்றை எடுத்து என்னிடம் நீட்டினான். அது டிஜிட்டல் வீடியோ கேமரா பொருத்தப்பட்ட லேட்டஸ்ட் செல்போன்! இன்றைய விலை நிலவரப்படி முப்பதாயிரம் ரூபாய்க்கு மேலிருக்கும். நான் அதை வாங்க மறுத்தேன். வற்புறுத்திக் கையில் திணித்தான். ஒரு புள்ளிகூட கலைந்து போகாத அதே பழைய ராமசாமியாகவே அவன் இருந்தான். நான் அவனுக்காகக் கொண்டு வந்திருந்த சாதாரண செல்போனை அவனிடம் கொடுக்கத் தயக்கமாக இருந்தது. அது அவனை நிச்சயம் சிறுமைப்படுத்துவதாகிவிடும்.

---

**தி**ங்கள் - வெள்ளி சன் டி.வி.யில் மதியம் 12.30 மணிக்கு ஒளிபரப்பாகும் 'தீர்க்க சுமங்கலி' தொடரின் வெற்றியைத் தொடர்ந்து, அடுத்த மெகா தொடருக்கு அஸ்திவாரம் போட்டிருக்கிறது அபிநயா கிரியேஷன்ஸ். 'செல்லமடி நீ எனக்கு'-டிசம்பரில் தொடங்கவுள்ள இத்தொடரினை 'சின்ன பாப்பா பெரிய பாப்பா' புகழ் சக்திவேல் இயக்குகிறார். ஒரு மனநல மருத்துவர், அவரை உரிமை கொண்டாடத் துடிக்கும் மூன்று பெண்கள்... என்று செல்லும் கதையில் வாரத்துக்கு வாரம், நாளுக்கு நாள் சஸ்பென்ஸ் குழைத்துத் தந்திருப்பதாகக் கூறும் சக்திவேல், மாறுபட்ட ஒரு குடும்பக் கதையைப் படமாக்குவதில் தாம் முழுமையாக சந்தோஷமடைவதாகக் கூறுகிறார்.

காயத்ரி ப்ரியாதான் இந்த சீரியலிலும் கதாநாயகி. 'மனைவியாக, குழந்தைக்குத் தாயாக, அதீத பாசம் வைத்ததால் நிகழும் விளைவுகளால் சூழ்நிலைக் கைதியாக, எனப் பல பரிமாணங்களில் இந்தத் தொடரில் வெளுத்து வாங்கியிருக்கிறேன். 'தீர்க்க சுமங்கலி' போலவே இதிலும் எனக்கு நல்ல பெயர் கிடைப்பது உறுதி. பெரிய திரைபோல சின்னத்திரைக்கும் சிறந்த நடிகை விருது கொடுப்பதாக இருந்தால், இந்த சீரியலுக்காக நான் வாங்கப் போவது உறுதி'' என்று கண்கள் படபடக்கக் கூறுகிறார் காயத்ரி ப்ரியா.

அபிநயா கிரியேஷன்ஸுக்காக இத்தொடரை ஜே.கே.விஜய் சஞ்சித் தயாரிக்க, கதையின் ஆக்கமும் பொறுப்பும் கவனிப்பது ஜே.கே.!

**- விக்டர்**

---

வது சந்திச்சுக்கறது வாடிக்கைதானப்பா. நான் மேல படிக்காததுனாலதானே உன்னக்கூட திரும்பப் பாக்க முடியாம போச்சு'' என்றான் யதார்த்தமாக.

மகனுக்குத் துணையாக தம் மனைவி அமெரிக்காவில் இருப்பதாகவும் இங்கே தாம் மட்டும் வேலையாட்களோடு விவசாயத்தைக் கவனித்துக் கொண்டிருப்பதாகவும் பக்கத்து ஊரிலிருந்து லீவுக்குத் தம் அக்கா மகள் இங்கே வந்திருப்பதாகவும் சொன்னான்.

போன மாதம் தம் மகன் குமார் வந்தபோது ஏகப்பட்ட பொருட்களை அள்ளிக் கொண்டு வந்து தனக்குக் கொடுத்து

இருந்து சாப்பிட்டுவிட்டுத்தான் போக வேண்டும் என்று உரிமையோடு சொன்னான். மாலை வரை அவனோடு மிக சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டுக் கிளம்பினேன்.

"அடிக்கடி வரப் பாரு. இல்ல செல்லுலயாவது பேசு'' என்று நம்பர் கொடுத்தான்.

பஸ் நிறுத்தம் வரை என்னைக் கொண்டு வந்து பஸ் ஏற்றிவிட்டான்.

டவுன் பஸ் சத்தியமங்கலத்தை நோக்கி ஓடிக்கொண்டிருந்தது. பாக்கெட்டில் ராமசாமி கொடுத்த அந்த டிஜிட்டல் செல்போன் கனத்துக் கொண்டிருந்தது - என் மனத்தைப் போலவே! ●

47

# அனாடமி அரிச்சுவடி!

இன்ச் டேப் மாலையும் கழுத்துமா இருந்த டெய்லர் பாலன், பெரியவர் கேசவன் கொடுத்த வெள்ளைத் துணியைக் கண்ணாலே அளந்து பார்க்கிறார்.

"என்ன தைக்கணும், ஸார்?"

"டாக்டருங்க போட்டுகிற கோட்டு."

"துணி போறாதே?"

"தாராளமாப் போறும்."

"ம்? ஆஃப் கைதான் வரும். பரவா யில்லைன்னா தெச்சுடறேன். அளவு கோட்டு கொண்டாந்து இருக்கீங்களா?"

"இல்லியே?"

"சரி, டாக்டருக்கு வயசு என்ன இருக்கும்? உடம்பு ஒல்லியா? குண்டா?"

"ஒல்லிதான். ஆனா உயரம்."

"வயசு?"

"அடுத்த மாசம் ஆண்டு நிறைவு; ஒரு வயசாகப் போவுது."

எதற்குமே சிரித்துப் பழகாத நரசிம்ம ராவ் கோத்திர பாலனே பற்களைத் தாராளமாகக் காட்டி, கதகளி ஆட்டக்காரர் மாதிரி கண்களை விரித்துச் சிரித்தார்.

"கோட்டு கொளந்தைக்கா?"

"ஆமா; என் பேத்திக்கு. அவளை டாக்டராக்காம விட மாட்டேன்."

"அப்படீங்களா? ஏனுங்க?"

"நம்ம ஊர் டயானா ஹாஸ்பிட்டல் பாத்திருக்கீங்களா?"

"ஓ... பெரிசா பளபளன்னு கட்டி இருக்காரே, டாக்டர் வெங்கடாசலம்தானே?"

"அதனோட கடக்கால் என்னோட பி.பி., ஷுகருக்காக நான் கொடுத்த பணத்திலேர்ந்து போட்டது. கிரௌன்டு ஃப்ளோர் ஆர்த்தரைடிஸ், ஸ்பான்டிலைடிஸ், அல்சருக்காகக் குடுத்த ஃபீஸ்லேர்ந்து கட்டினது. ரெண்டு ஸ்பெஷல் ரூமோட காஸ்ட் என் பொண்டாட்டியோட இன்குவினல் ஹெர்னியா ஆபரேஷன்லேர்ந்து அவருக்குக் கிடைச்சது. இன்னும் சொல்லிண்டே போலாம். நியாயமா பாத்தா எங்க குடும்பப் பெயரை ரிசப்ஷன்லே இருக்கிற கரும்பலகை டாப்பிலே பொறிச்சு இருக்கணும். அவரோட லேட்டஸ்ட் ஹோண்டா சிட்டி காரோட நாலு டயரும், சீட்டும் என்னோட பெண் சிஸேரியன் பிரசவத்துக்கு டாக்டர் மிஸஸ் கௌரி வெங்கடாசலத்துக்குக் குடுத்தது."

"தமாஷா பேசறீங்க. நாங்கூட இந்த கத்திரிக்கோலைப் பிடிக்காம டாக்டருக்குப் படிச்சுக் கத்தியைப் பிடிச்சிருந்தா துணிகளைக் 'கட்' பண்ணி மெஷின் தையல் போட்டு அம்பது, நூறுன்னு வாங்கறதுக்குப் பதில் உடம்பை அங்கங்கே 'கட்' பண்ணி தையல் போட்டு அஞ்சாயிரம், பத்தாயிரம்னு வாங்கி இருப்பேன்."

"சரியாச் சொன்னீங்க, பாலன். ஆனா எல்லாரும் டாக்டராயிட்டா யாரு இன்ஜினியர் ஆகறது? கொத்தனார் ஆகறது? டெய்லர் ஆகறது?"

"ஒரு வயசு ஆகற பொண்ணுக்குத் தானே கோட் தைக்கணும்? துணி நிறைய இருக்குங்களே, ரெண்டா தெச்சுடலாமா?"

"செய்யுங்க. என் பேத்தி டாக்டர் ஆகணும்னு என் பொண்ணும் இப்பவே பாடத்தை ஆரம்பிச்சுட்டா."

"ஓ! அப்படீங்களா? டி.என்.பி.சி.சு.சு.ன்னு ஏதோ சொல்றாங்களே... அந்தப் பரீட்சைக்கு கோச்சிங் கிளாஸுக்கு அனுப்பறீங்களா?"

"சேச்சே. அவ்வளவு தூரத்துக்கு அதுக்குள்ளே பாயலே. கொழந்தை இன்னும் வாயிலே ரெண்டு வெரலைப் போட்டுண்டு இருக்கா. எப்படி பேனாவைப் பிடிச்சு அப்ஜக்டிவ் டெஸ்ட் கொஸ்டின் பேப்பரில் டிக் அடிப்பா?"

"அப்போ, உங்க பொண்ணு என்ன பாடம் சொல்லித் தராங்க?"

"ஷ்ரேயா உன் தலை எங்கே? ஷ்ரேயா உன் வயிறு எங்கே? 'ஷ்ரேயா உன் வாய் எங்கே? ஷ்ரேயா உன் காது எங்கே?'ன்னு கேட்டு அனாடமியோட அரிச்சுவடியைச்

# கற்பனை



சொல்லிக் குடுக்கிறா?"

''டாக்டர், கொழந்தை சரியா காட்டுதுங்களா?"

"எங்கே? சில சமயம் காட்டுது. சில சமயம், கண்ணு எதுன்னா காதைக் காட்டுது. மூக்கு எதுன்னா கண்ணைக் காட்டுது. வாய் எதுன்னா வயித்தைக் காட்டுது."

''அப்போ ஷ்ரேயா மோளு டாக்டர் ஆவணும்னு கனவு காணலியா?"

"சரியாத் தெரியலே. ஆனா என் பேத்தி மாடர்ன் ஓவியர் ஆனாலும் ஆயிடுவான்னு தோணறது."

"ஸாரு எதை வெச்சுச் சொல்றது?"

"ஓவியர் பிகாஸோ தெரியுமா? அவர் போட்ட மனுஷங்க படத்திலே கண் இருக்கிற இடத்திலே காது இருக்கும். காது இருக்கிற இடத்திலே வாய் இருக்கும். மூக்கு இருக்கிற இடத்திலே நாக்கு இருக்கும். ரவிவர்மா படம் மாதிரி பளிச்சுனு புரியாது. 'பிகாஸோ மாதிரி ஷ்ரேயாவும் ஆயிடுவாளோ?'ன்னு என் பொண்ணுகிட்டே கேட்டேன். அவ அதுக்கு, 'நல்லதா போச்சுப்பா, டாக்டர்னா லட்சாதிபதி ஆயிடுவா. பிகாஸோன்னா கோடீஸ்வரி ஆயிடுவாளே'ன்னு என்னை உடனே கலர் பென்சில், கிரேயான் எல்லாம் வாங்கிண்டு வரச் சொல்லி இருக்கா. அடுத்தது ஸ்டேஷனரி ஷாப்புக்குப் போகணும். வரட்டா!"

**- ஜே.எஸ்.ராகவன்**



## விவசாயம்

# கருவேலங் காட்டில் கரும்புத் தோட்டம்!

தஞ்சை - நாகை சாலையில் அம்மாப் பேட்டையிலிருந்து நான்கு கி.மீ. தொலைவில் இருக்கிறது செம்பியநல்லூர் கிராமம். கடந்த ஆறு வருடங்களாக இங்கு இயற்கை விவசாயியாக வாழ்ந்து வருகிறார் திருநாவுக்கரசு. முப்பத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்பு காரைக்குடி அழகப்பா பொறியியல் கல்லூரியில் பி.இ. ஹானர்ஸ் தேறியவர். இன்று முழு நேர இயற்கை விவசாயி. பட்டம் பெற்றபின் தொடர்ந்து இருபத்தெட்டு ஆண்டுகளாக மேற்கு வங்கம், மகாராஷ்டிரா, ஆந்திரா, அபுதாபி எனச் சுற்றிச் சுழன்று கொண்டிருந்தவரை 'கிராமம் சார்ந்த விவசாயமே இந்தத் தேசத்தை எப்போதும் உயிர்ப்பித்துக் கொண்டிருக்கும்!' என்கிற காந்தியடிகளின் வாக்கு, செம்பியநல்லூர் கிராமத்திலேயே கட்டிப் போட்டுவிட்டது.

மண், தெய்வமாக மதித்துப் போற்றப்பட வேண்டுமென்பது இந்த இயற்கை விவசாயியின் எண்ணம். விளைநில மண்ணை நிர்வாணமாக்கிவிடாது, அதன் மீது எப்போதும் பசுமை போர்த்தப்பட்டிருக்க வேண்டும் என்கிறார் இவர். இவரது செயல்பாட்டின் கீழ் இருந்து வரும் ஐம்பது ஏக்கர் விளைநிலப் பரப்பில் வானம் பார்த்த வண்டல் மண் பரப்பு எங்குமில்லை.

இன்றைய இவரது செம்பியநல்லூர் கரும்புத் தோட்டம், ஆறு ஆண்டுகளுக்கு முன்பு வரை முழுமையான வேலிக்கருவேல முள்மரக் காடாக இருந்ததென்றால் யாராலும் நம்ப முடியாது. கருவேல மரம் வளர்ந்த மண்ணில், அதன் பின்னர் வேறு எந்தப் பயிரும் எளிதில் உரிய பலனைத் தந்துவிடாது என்று பலரும் திருநாவுக்கரசைப் பயமுறுத்த, அதனையே ஒரு சவாலாக எடுத்துக்கொண்டவர், கருவேல முள்மரக் காட்டினை முற்றிலுமாக அழித்துவிட்டு, பலவகைப் பழமரக் கன்றுகளை ஆங்காங்கே நட்டு வைத்திருக்கிறார். பரந்த உட்பரப்புகளின் ஊடு பயிர்களாக சோளம், நிலக்கடலை போன்றவற்றை விதைத்திருக்கிறார். இயற்கை உரமிட்டு அதன் மண் வளத்தினை கொஞ்சம் கொஞ்சமாக மேம்படுத்தியவர், அந்தக் கருவேலக் காட்டில் தான் கடந்த இரண்டு வருடங்களாகக் கரும்பு சாகுபடி செய்து வருகிறார்!

பொதுவாக, திருவாரூர் மாவட்டப் பகுதிகளில் சராசரியாக ஓர் ஏக்கருக்கு இருபத்தைந்து டன் கரும்பு உற்பத்தியாவதாகச் சொல்லப்படுகிறது. ஆனால், தமது தோட்டத்தில் ஓர் ஏக்கருக்கு நாற்பது முதல் நாற்பத்தைந்து டன் வரைக்கும் கரும்பு விளைகிறது என்கிறார் திருநாவுக்கரசு.

"அத்தனையும் இயற்கை வேளாண்மையின் மகிமை!" என மகிழ்பவர், "இன்னும் நான்கைந்து ஆண்டுகளில் ஓர் ஏக்கருக்கு நூறு டன் கரும்பு வெட்டியெடுக்கப்பட வேண்டும் என்பதே என்னுடைய இலக்கு!" என்கிறார் நம்பிக்கையோடு.

செய்திச் சித்திரம் :
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# ஹா..ஹா..ஹா...





''என்ன, டைரக்டரும் அசிஸ்டென்ட் டைரக்டரும் 'பரட்டை', 'பரதேசி'ன்னு திட்டிக்கிறாங்க!''

''நீங்க வேற, அவங்க படத்தோட டைட்டிலை பத்தி டிஸ்கஸ் பண்றாங்க.''

- ராதா நரசிம்மன்

''ஏங்க, எங்கம்மா காபி கொடுத் தாங்களாம். நீங்க வேண்டாம்னு சொல்லிட்டீங்களாமே... ஏன்?''

''எனக்குத் தண்ணியிலே கண் டம்னு ஜோசியர் சொல்லியிருக்காரு கமலா.''

- டி.கே.ராமமூர்த்தி





''நான் கேக்கறதுக்கு பதில் சொல்லுடி, நடிகர் சூர்யா வீட்டு வாசல்ல மழை பெய்ஞ்சா எப்படிப் பெய்யும்!''

''இது தெரியாதா... 'ஜோ'ன்னு தான்.''

- ராதா நரசிம்மன்

''கலா, காதலின் அடையாளமா நம்ம மோதிரங்களை மாத்திக் கலாம்னு சொன்னா, ஏன் வேண்டாங்கற?''

''உங்க மோதிரம் கால் பவுன், என்னுடையது ரெண்டு பவுனாச்சே!''

- டி.கே.ராமமூர்த்தி





# 3

**பொ**ய்கையாழ்வார், பூதத்தாழ்வார் இருவரும் இரண்டு வகை விளக்குகளை ஏற்றி வைத்தனர். ஒன்று, உலகத்தையே தகளியாகக் கொண்டு, கடலை அதில் வார்த்து சூரியனைப் பற்ற வைத்தது; மற்றொன்று அன்பை அகல்விளக்காக்கி, ஆர்வத்தை நெய்யாக ஊற்றி, சிந்தனையைத் திரியாக்கி ஏற்றி வைத்த ஞானவிளக்கு.

இவற்றினால் கிடைக்கும் வெளிச்சத்தில் தெரியும் காட்சி என்னவென்பதைப் பேயாழ்வார் அற்புதமாகச் சொல்லியிருக்கிறார்.

# விஷ்ணு தரிசனம்...

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன் - செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பால் இன்று.

(அருக்கன் - சூரியன், செருக்கிளரும் - போரில் கலக்கும், ஆழி - சக்கரம், கடல்)

நான் தரிசித்தது என்ன?

'திரு என்னும் மகாலக்ஷ்மியைப் பார்த்தேன். பொன் போன்ற உடலைப் பார்த்தேன். சூரியப் பிரகாசம் கொண்ட ஆபரணங்களைப் பார்த்தேன். பகைவரைக் கொல்லும் சக்கராயுதத்தையும் சங்கையும் பார்த்தேன். கடல்வண்ணன் நாராயணனைப் பார்த்தேன்' என்கிறார்.

சட்டென்று மின்னல் வெளிச்சத்தைப்போல் இவையனைத்தும் ஒரே சமயத்தில் மின்னுவதாக இலக்குமி சமேதராக விஷ்ணு ஆழ்வாருக்குத் தரிசனம் தந்திருக்கிறார். அதன் பரவசத்தை ஆழ்வார் நமக்குச் சொல்லியிருக்கிறார். 'மகாவிஷ்ணு எப்படி இருப்பார்?' என்று சின்ன வயதில் கேட்டிருப்பீர்கள். 'கையில் சங்கு சக்கரத்துடன் நீல நிறமாகப் பக்கத்தில் அல்லது மார்பில் லட்சுமியுடன் இருப்பார்' என்று உங்கள் தாய் சொல்லியிருப்பார்.

மானிடர்களுக்கு மகாவிஷ்ணுவின் தோற்றத்தைப் பற்றி ஆழ்வார்கள் பலரும் பலவிதமாகப் பாடியிருப்பார்கள். பேயாழ்வாரின் இந்தத் தரிசனம் அவற்றின் எளிமையான ஒரு வருணனை. அடுத்தமுறை அகல் விளக்கேற்றி வைக்கும்போது இந்தப் பாசுரத்தை நினைவு கொள்ளுங்கள், மகாவிஷ்ணு தெரியலாம்.

(படிக்கலாம்)

சுஜாதா





# அமெரிக்காவுக்கே சவால்!

அமெரிக்கா நொந்துபோயிருந்தால் ஆச்சரியமில்லை. அணுசக்தி கொண்ட ஏழாவது நாடாக வடகொரியா தன்னைப் பதிவுசெய்து கொண்டிருக்கிறது. கடந்த அக்டோபர் 9ஆம் தேதி அணு சோதனையை முதன்முறையாக வெற்றிகரமாக முடித்திருக்கிறது. அமெரிக்கா மற்றும் ஜப்பானிய நிலநடுக்க ஆய்வாளர்கள், 4.2 ரிக்டர் அளவுகொண்ட நிலநடுக்கம் வடகொரியாவில் ஏற்பட்டுள்ளதாகவும் அதனால் இது உண்மையாக இருக்க வாய்ப்பிருப்பதாகவும் கூறியுள்ளனர்!



அறிவிக்காமலேயே அணுசக்தி சோதனைகளை நடத்திய நாடுகள், இந்தியா, பாகிஸ்தான், இஸ்ரேல். இந்தியாவும், பாகிஸ்தானும் 1998-ல் தமது வெற்றிகரமான அணுசக்திச் சோதனைகளை வெளிப்படுத்தின. இஸ்ரேல் இன்றுவரை இதனை வெளிப்படையாக ஒப்புக்கொள்ளவில்லை. இப்போது இந்தப் பட்டியலில் கூடுதலாக வடகொரியா!

இந்தியா உட்பட அமெரிக்கா, இங்கிலாந்து, சீனா, ஜப்பான் எனப் பல நாடுகளும் வடகொரியாவின் இந்தச் செயலைக் கண்டித்துள்ளன. இந்தியா, கண்ணாடி வீட்டுக்குள்ளிருந்துகொண்டு கல் எறிகிறது!

1948-ல் கொரியா வடக்கு, தெற்கு என இரு நாடுகளாகப் பிரிந்தது. இந்த இரு நாடுகளும் அப்போதிலிருந்தே நேரடியாகவும் மறைமுகமாகவும் போர் தொடுத்தபடிதான் உள்ளன.

வடகொரியா ஏழை நாடு. இந்நாட்டுக்கு உடனடித் தேவை பெட்ரோல் ஆனால், கிடைக்கும் தங்கத்தைக் கொண்டு அது வாங்குவதோ ஆயுதங்களை!

இந்நாடு அமெரிக்காவைப் பகையாகவே எண்ணி வருகிறது. தென்கொரியாவின் ஒரு பகுதியில் அமெரிக்க உளவு விமானங்கள் வடகொரியாவைக் குறி பார்த்தபடி இருக்கின்றன.

சமீபத்தில், ஆக்கிரமிப்புக்கு எதிரான இரு தரப்புப் பேச்சுவார்த்தைக்கு அமெரிக்காவை அழைத்தது வடகொரியா. செல்ல மறுத்துவிட்ட அமெரிக்கா, ஏற்கெனவே போடப்பட்ட பல இருதரப்பு ஒப்பந்தங்களை வடகொரியா மதிக்கவில்லை என்று நினைவூட்டியிருக்கிறது.

இப்போதைய அணுச் சோதனையைத் தொடர்ந்து ஐ.நா. மேலும் பலவித பொருளாதாரத் தடைகளை வடகொரியாவின் மீது விதித்திருக்கிறது.

'அணு ஆயுதங்களை வடகொரியா வைத்திருக்கக் கூடாது. அதன் அரசியலில் எந்தத் திரைமறைவும் இருக்கக் கூடாது' என்று சில நாடுகள் கருத 'அமெரிக்காவுக்குச் சவால்விடவும் ஓர் ஆள் இருப்பது நல்லதுதான்' என்று கணக்குப் போடுகின்றன மற்ற நாடுகள்

ஜி.எஸ்.எஸ்.

## அருள்வாக்கு



# ஹ்ருதயம்...

மூளைக்குத் தெரிகிறது வேறே; அதற்கும் ஆதாரமான உயிருக்குத் தெரிகிறது வேறே. கோட்டான் கண்ணுக்கு வஸ்துக்கள் ராத்திரியில்தான் தெரிகின்றன. பகலில் அதற்கு எதுவும் தெரிவதில்லை. ஆனால், மனுஷக் கண்ணுக்கு எந்தப் பொருளும் பகலில்தான் தெரிகிறது; ராத்திரியில் தெரிவதில்லை. மூளைக்கு அனுபவம் தெரிவதில்லை; அதற்குத் தர்க்கத்தையொட்டி விசாரிக்கிற அறிவு வாதம் தான் தெரியும். அனுபவம் தெரிகிற ஹ்ருதயத்துக்கு அறிவு வாதம் தெரிவதில்லை. ஜீவனின் சார சத்யமான உயிரைத் தான் ஹ்ருதயம் என்பது.

ஹ்ருதயமே அனுபவிக்க வேண்டிய ஆத்யாத்மிக விஷயங்களைக்கூட மூளை சரியாயிருக்குமா, இருக்காதா என்று எடை போட்டுப் பார்க்க ஆரம்பிக்கிறது. சரியாயிருப்பதாக அது முடிவு பண்ணினது போதாது. இதனால் அந்த விஷயத்தின் லக்ஷ்யமான ப்ரயோஜனம் நமக்குக் கிடைத்து விடவில்லை.

உதாரணமாக, ஆத்மா சச்சிதானந்த ஸ்வரூபமாகத்தான் இருக்க வேண்டுமென்று இத்தனை வேதாந்த புஸ்தகங்களைப் படித்து, குரு உபதேசங்களைக் கேட்டுப் புத்தியினால் புரிந்து கொண்டபோதிலும் நமக்கு சத்தும் தெரியலை, சித்தும் தெரியலை, ஆனந்தமும் தெரியலை. அசடு மாதிரி துக்கப்பட்டுக் கொண்டுதான் கிடக்கிறோம். அதனால் புத்திக்குள் போனதோடு நிறுத்திக்கொள்ளாமல் அதை ஹ்ருதயத்துக்குள் இறக்கிக்கொள்ள வேண்டும்' என்று நினைக்கிறோம்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

**நிலவரம்**



பூஜாவின் கேள்வியால் அடைந்த அதிர்ச்சியிலிருந்து மீள்வதற்கு நிறைய நொடிகள் தேவைப்பட்டன குமரனுக்கு.

"பூஜா, நீ கேட்ட கேள்வியோட அர்த்தம் புரிஞ்சுதான் கேட்டியா?"

"சத்தியமா சொல்றேன் குமரன். எனக்கு, கூலிக்குக் கொலை செய்ற ஒரு ஆளு வேணும்."

"எதுக்கு பூஜா?"

"நானே செஞ்சிடுவேன். அதுக்கான காரணமும், ஆத்திரமும் இருக்கு. ஆனா அந்த அளவுக்குத் துணிச்சல் இல்லை, குமரன்."

"பூஜா, என்ன பிரச்னை இப்போ?"

"ஆகாஷ் செத்தாதான் என் பிரச்னைகள் தீரும், குமரன்."

"என்ன செஞ்சான்?"

"திடீர்னு புறப்பட்டு வந்து என் வீட்ல உக்காந்துக்கிட்டு அதிகாரம் பண்றான், மிரட்டறான்."

"அதான் சட்டப்படி பிரிஞ்சிடறதுன்னு முடிவு செஞ்சாச்சே..."

"அதுக்கு நஷ்டஈடு மாதிரி ஒரு வருஷம் நான் அவன் கட்டுப்பாட்டுல இருந்து, சினிமால நடிக்கணுமாம்!"

"இதென்ன காட்டுமிராண்டித்தனமான கண்டிஷன்? பிடிக்கலைன்னா விட்டுட வேண்டியதுதானே?"

"பிடிவாதமா நிக்கிறான் குமரன்."

"நீயும் பிடிவாதமா நில்லு. என்ன செஞ்சிடுவான்?"

"சொன்னா வெக்கக்கேடு. அவன் விளம்பரப் படம் எடுக்கறதைத் தொழிலா வைச்சிருக்கிறதால புத்தி எப்படியெல்லாம் போகுது பாரு! நீ தப்பானவன்னு ஒரு வீடியோ படம் உருவாக்கி என்னை நம்ப வைச்சி நம்ம காதலைப் பிரிச்சான். என்னிக்கும் நான் அவன் கட்டுப்பாட்டுலேயே இருக்கணும்ங்கறதுக்காக எனக்கே தெரியாம என்னை... சொல்லவே கூசுது! ரகசியமா படம் எடுத்து வெச்சிருக்கான். அதாவது நான் குளிக்கிறப்போ... ச்சீ! மனுஷனே இல்லை அவன்!"

"அடப்பாவி! பூஜா... நீ போலீசுக்குப் போக வேண்டியதுதான்!"

"எப்படி குமரன்? அதை சி.டி. போட்டு உலகம் பூரா விப்பேன்னு சொல்றான். இண்டர்நெட்ல போடுவேன்றான். இலவசமா எல்லா செல் போனுக்கும் அனுப்பி வைப்பேன்றான்."

"என்ன ஒரு வக்கிரம்!"

"அதுக்கு மேல ஏதாவது வார்த்தை இருந்தா சொல்லு!"

"சைபர்க்ரைம்னு தனியா ஒரு பிரிவு இருக்கு பூஜா."

"தெரியும் குமரன். நான் அவங்க உதவியை நாடறது அவனுக்குத் தெரியாமப் போகாது. உடனே அவன் சொன்ன மாதிரி செஞ்சிட்டான்னா... அப்புறம் தற்கொலை தான் செஞ்சுக்கணும்."

"ரொம்ப பெக்யூலியர் பிரச்னை பூஜா, யார் சொன்னாலும் அவன் கேக்க மாட்டானா?"

"மாட்டான்; அட்வைஸ் கேக்கற மனுஷன் இல்லை அவன். மூளையில விரிசல் இருக்கு. உடம்பு பூரா திமிர்! இந்தப் பிரச்னைக்கு ரெண்டே முடிவுதான். ஒண்ணு நான் சாகணும்! இல்லை, அவன் சாகணும்!"

"ஏய்! என்ன பேச்சு இது?"

"வேற எப்படிப் பேசச் சொல்றே? இனிமே என்ன இருக்கு எனக்கு இந்த வாழ்க்கைல? ஒரு

# 14 தொடர்கதை



நோக்கமும் இல்லாம அர்த்தமும் இல்லாம வேதனையும், விரக்தியுமா ஒவ்வொரு நாளையும் தள்ளிக்கிட்டு இந்தப் பூமிக்குப் பாரமா இருக்கேன்.''

''பைத்தியம் மாதிரி பேசாதே! எல்லாமே மாறும் பூஜா! இன்னும் உனக்கு வாழ்க்கை இருக்கு; எதிர்காலம் இருக்கு. வேதனை, விரக்தி எல்லாம் தற்காலிகமான விஷயம். மறுபடி நீ சிரிப்பே! சந்தோஷப்படுவே!''

''அதெல்லாம் கனவுல தான் நடக்கும்.''

''இல்ல... நான் நடத்திக் காட்றேன். நீயும், நானும் வாழ்க்கைல இணைய முடியாம போனது வேற! அதுக்காக அந்தக் காதல் செத்துடலை. மனசுல ஒரு அத்தியாமா, ஒரு பக்கத்தில அப்படியே பசுமையா இருக்கு. நீ விடற கண்ணீர் என் மனசுல அமிலம் விழுந்த மாதிரி அரிக்கும். பூஜா, ஆகாஷ் இப்ப எங்க இருக்கான்?''

''என் வீட்லதான் இருக்கான். போலீசை வரவழைச்சேன். அவங்க முன்னாடி வெளியே போற மாதிரி போயிட்டு மறுபடி வந்துட்டான்!''

''நீ என்னைப் பார்க்க வர்றது அவனுக்குத் தெரியுமா?''

''தெரியாது. ஆனா அன்னிக்கு நீயும், நானும் கடற்கரைல சந்திச்சுப் பேசினது அவனுக்குத் தெரிஞ்சிருக்கு. என்னைக் கண்காணிக்கிறதுக்கு யாரையோ போட்டிருக்கான்.''

''அப்படின்னா அந்தாளு இப்பவும் உன்னைத் தொடர்ந்து வந்திருக்க மாட்டானா?''

''வாய்ப்பிருக்குன்னு யூகிச்சுதான் நான் போக்கு காட்டி, மூணு நாலு பாதையில சுத்தி இங்க வந்தேன்.''

''என்ன பூஜா... இப்படிப்பட்ட ஒருத்தனைப்

**பட்டுக்கோட்டை பிரபாகர்**

போயி நம்பி உன் வாழ்க்கையையே ஒப்படைச்சுத் தொலைச்சியே... எவ்வளவு பெரிய தப்பு!"

"அந்தத் தப்புக்குத்தான் தண்டனை அனுபவிச்சிட்டு இருக்கேன்."

"சரி... வரட்டுமா உன்னோட? ஆகாஷைச் சந்திச்சுப் பேசலாமா?"

"நீ பேசினா உடனே எப்படி ஒத்துக்குவான்?"

"நான் வாயால முதல்ல பேசுவேன், பூஜா. அப்புறம்... வேற விதமா பேசுவேன்."

"என்ன சொல்றே?"

"என்னைப் பத்தி உனக்குத் தெரியாது பூஜா. எனக்கு வேண்டிய உனக்கு ஒருத்தன் டார்ச்சர் குடுக்கறப்ப என்னால பாத்துக்கிட்டு சும்மா இருக்க முடியாது பூஜா. ஒரு நிமிஷம்!"

குமரன் தன் செல்போன் எடுத்தான். எண்கள் தொட்டான்.

"ஹலோ பத்ரி... நான் இப்ப பூஜாவோட கொஞ்சம் வெளில போறேன். ஒரு மணி நேரத்துல வந்துடுவேன். இதே இடத்துல வெய்ட் பண்றியா? இல்ல எங்கயாவது போய்ட்டுத் திரும்பி வர்றதுனாலும்..."

"குமரன்... ஒண்ணு செய்றேன். நான் பஸ் பிடிச்சு பாண்டிச்சேரி போயிடறேன்... எனக்கு அங்க வேலை இருக்கு."

"அப்படின்னா சரி. ஸாரி பத்ரி... என்ன வேலையா போறேன்னு உனக்கு வந்து டீட்டெய்லா சொல்றேன்."

"நோ ப்ராப்ளம்!" என்றான் எதிர்முனையில் பத்ரி.

போனை வைத்தான் குமரன்.

ஆர்டர் சொன்ன ஆயிட்டங்களைக் கொண்டு வந்த சர்வர், காரின் கதவில் ட்ரே பொருத்தி அதன்மேல் வைத்தான்.

"வேற எதுவும் வேணாம். சீக்கிரம் பில் எடுத்துட்டு வாங்க" என்ற குமரன், "சீக்கிரம் சாப்பிட்டுட்டுப் புறப்படலாம், பூஜா" என்றான்.

"குமரன், உன் பிளான் என்ன? ஆகாஷ் எப்படிப் போனாலும் ஒத்து வரவே மாட்டான்" என்றாள் சாப்பிட்டபடி பூஜா.

பதில் எதுவும் பேசாமல் வேகவேகமாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான் குமரன்.

**நிஜம்!**

"'இன்றைய இளைஞர்களை நினைத்து எனக்கு கலக்கமாக இருக்கிறது. அவர்கள் போதைப் பழக்கத்துக்கு ஆளாகித் தவிக்கிறார்கள் இந்தியாவின் எதிர்காலமே இதனால் கேள்விக் குறியாகிக் கொண்டிருக்கிறது' என்று வருத்தப்பட்டு ஒரு மேடைப் பேச்சில் குறிப்பிட்டிருந்தார் ஜனாதிபதி அப்துல் கலாம் அவர்கள். இது என்னை மிகவும் யோசிக்க வைத்துவிட்டது. அப்துல் கலாமின் ஆதங்கத்தை அப்படியே பிரதிபலிக்கத் துவங்கிவிட்டேன். அதுதான் நான்

மது அருந்தியபடி தொலைக்காட்சியில் ஓர் ஆங்கிலத் திரைப்படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான் ஆகாஷ்.

அவனுடைய செல்போன் ஒலிக்க... எடுத்துக் காதில் வைத்தான்.

"ம்... சொல்லு!"

"சார்... வந்து..." என்று எதிர்முனைக் குரல் தயங்கியது.

"என்ன?"

"பூஜாவைத் தொடர்ந்து போய்க்கிட்டிருந்தேன். திடீர்னு என் பார்வை லேர்ந்து தப்பிட்டா. எந்தப் பக்கம் போனாள்னே தெரியலை!"

"முட்டாள்! இந்தப் பதிலைச் சொல்றதுக்குத்தான் உனக்குப் பணம் கொடுத்து வெச்சிருக்கேனா? அவளோட ஒவ்வொரு அசைவும் எனக்குத் தெரிஞ்சாகணும்!"

"இந்தத் தடவை மன்னிச்சிடுங்க சார்!"

"வைடா போனை!" எரிச்சலுடன் ஆகாஷ் தன் செல்போனை அணைத்து சோபாவில் எறிந்தான்.

அழைப்பு மணி ஒலித்தது.

போய்த் திறந்து வியந்தான். பூஜாவும், குமரனும் நின்றிருந்தார்கள். இருவரும் உள்ளே வந்தார்கள்.

ஒரு விநாடி அதிர்ந்த ஆகாஷ், உடனே சுதாரித்துக்கொண்டான்.

"ஹலோ குமரன்! கை கொடுங்க. கல்யாணமாமே... தடபுடலா ஏற்பாடுகள் நடக்குதாமே.. வாழ்த்துக்கள்!"

"உன் வாழ்த்து எனக்குத் தேவை

இயக்கி வரும் 'நிஜம்' குறும்படம்'' என்கிறார் சி.எம்.துரைப்பாண்டியன். எழில் கலைக்கூடம் என்னும் புதிய பட நிறுவனம் இப்படத்தைத் தயாரிக்கிறது. படம் தயாரானதும் அப்துல் கலாமின் பார்வைக்கு அனுப்பிய பிறகே இதனை திரையிட உள்ளார்களாம்.

- அனிதா



* குறும்படத்திலிருந்து...

யில்லை''

"ஆமாம்.. வேற ஒரு பொண்ணோட கழுத்துல தாலி கட்டப்போற நீங்க, இப்போ என் பொண்டாட்டியோட சேர்ந்து வர்றீங்களே... உங்க மனசுல என்னதான் ஐடியா வைச்சிருக்கீங்க? டைவர்சுக்கு அப்புறம் பூஜாவைக் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சொன்னீங்களாமே... அப்போ அது... சும்மாவா...? ஓ! புரியுது... பூஜாவைச் சின்ன வீடா ரகசியமா வெச்சுக்கப் போறீங்க. சரியா?''

சட்டென்று ஆகாஷின் சட்டையைப் பிடித்தான் குமரன். அவன் கண்கள் சிவந்தன.

"ஆகாஷ்! பூஜாவை விட்டு நீ நிரந்தரமா விலகணும்."

''விலகத்தான் போறேன். இஷ்டமில்லாதவனோட எப்படி குடும்பம் நடத்த முடியும்? கையை எடுங்க குமரன்!''

"பூஜாவை அசிங்கமாப் படம் எடுத்து வெச்சிருக்கியே... அந்த சி.டி.யை இப்பவே உடனே ஒப்படைக்கணும். எந்தத் தொந்தரவும் குடுக்காம அவளைவிட்டு விலகணும்!''

"இதெல்லாம் உங்க விண்ணப்பமா?''

"இல்லை... உத்தரவு!''

குமரனிடமிருந்து தன்னைப் பிடுங்கிக்கொண்டு விலகி நின்ற ஆகாஷ் சிரித்தான்.

"எந்தத் தைரியத்துல எனக்கு உத்தரவு போடறே?''

"இந்த தைரியத்துல!''

தனது பேண்ட் பாக்கெட்டிலிருந்து கையடக்க பிஸ்டலை எடுத்து அவன் நெஞ்சுக்கு நேராக நிமிர்த்தினான் குமரன்.

இதை பூஜாவே எதிர்பார்க்கவில்லை.

''குமரன்... என்ன... இது...'' என்று தடுமாறினான் ஆகாஷ்.

"நீ வாயால பேசறவன்; நான் அப்படி இல்லை. எங்க வீட்ல எனக்கும், எங்கப்பாவுக்கும் தனித்தனியா லைசென்ஸ் இருக்கு. ரகரகமா நாலுவிதமான துப்பாக்கியும் இருக்கு. என் வாழ்க்கையில இதைப் பயன்படுத்தற சந்தர்ப்பம் வரவே வராதுன்னு நினைச்சிட்டிருந்தேன். பயன்படுத்த வெச்சிடாதே! எடு! அந்த சிடியை எடு!''

வியர்த்துப் போனான் ஆகாஷ்.

"அது... என்கிட்ட இப்ப இல்லை!''

"எங்க இருக்கு?''

"பெங்களூர்ல இருக்கு. என் ஆபீஸ் மேஜை டிராயர்ல இருக்கு.''

"எத்தனை காபி போட்டே?''

''ஒண்ணே ஒண்ணுதான்.''

"போன் எடுத்துப் பேசு. உன் ஆபீஸ்லேர்ந்து யாராவது அந்த சி.டி.யை எடுத்துக்கிட்டு உடனே ஃப்ளைட் பிடிச்சு இங்க வரணும். அதுக்கு உத்தரவுகள் சொல்லு! அதிகமா ஒரு வார்த்தை பேசினாலும் சுடுவேன்! ம்... சொல்லு!''

பிஸ்டல் முனையில் வேறு வழியில்லாமல் ஆகாஷ் தன் செல்போனில் தன் அலுவலகத்தின் மேனேஜரை அழைத்து உத்தரவுகள் பிறப்பித்தான்; வீட்டின் விலாசமும் சொன்னான். வைத்தான்.

"இப்ப உன்னைச் சுடலாம், இல்ல?'' என்றான் குமரன்.

(தொடரும்)

தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** நல்ல யோகமான வாரம். வாக்கு வன்மை மேலோங்கும். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தைகள் இடம்மாறிப் போவார்கள். மனச்சலனம் விலகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். தூரதேசப் பிரயாணம் வந்து சேரும். வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்படும். புதிய தொழில் துவங்க நல்ல காலம். வீடு/வாகனச் சேர்க்கை ஏற்படும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் எச்சரிக்கையாக இருக்கவும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்து வரவும்.

**ரிஷபம்:** திருமணக் காரியம் கூடி வரும் வாரம். சுபகாரிய நிகழ்ச்சிகள் நடக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். கணவன் - மனைவிக்குள் விட்டுக் கொடுத்துப் போகவும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். புதிய ஒப்பந்தம் கையெழுத்திட நேரிடும். புத்திர பாக்கியம் உண்டாகும். புதிய வேலை வாய்ப்பு வந்து அணுகும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். வீடு/மனை வாங்கும் தருணம். ராகு/கேது வழிபாடு செய்து வரவும்.

**மிதுனம்:** மன உளைச்சல் தீரும் வாரம். நண்பர்கள் வழியில் ஆதாயம் கிட்டும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். பணக் கஷ்டம் தீரும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். வியாபாரத்தில் அபிவிருத்தி உண்டு. திருமணக் காரியம் கைகூடும். குழந்தைப் பாக்கியம் கிட்டும். புதிய தொழில் துவங்க நல்ல தருணம். மகான்கள் தரிசனம் கிட்டும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். குரு/சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**கடகம்:** தடை விலகித் திருமணம் கைகூடும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். பொருளாதாரம் மேம்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். கணவன்-மனைவிக்குள் அனுசரணை தேவை. வாக்குவாதத்தைத் தவிர்க்கவும்.

'என் ராசிக்கு கணவன்,
மனைவிக்குள்ள விட்டுக்
கொடுத்துப் போகணுமாம்...
இவ என் வாயைப் பிடுங்காம
இருக்கணுமே!'

படம் : ஸ்ரீஹரி



வாகனத்தில் செல்லும்போது கவனத்துடன் செல்லவும். கொடுக்கல், வாங்கலில் எச்சரிக்கை தேவை. குழந்தைகள் வழியில் சந்தோஷம் கிட்டும். புத்திர பாக்கியம் கிட்டும். பூர்வீகச் சொத்துகள் கிடைக்கும். வேலையில் நற்பெயர் உண்டாகும். உடல் நிலையில் கவனம் தேவை. வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வீடு, மனை வாங்க நல்ல நேரம். சத்ரு தொல்லை விலகும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர, நற்பலன் பெருகும்.

**சிம்மம்:** மேன்மையான வாரம். வீடு மாற்றம் உண்டாகும். தொழில்துறையில் மேன்மை ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். மனத்தில் தன்னம்பிக்கை ஏற்படும். நண்பர் வழியில் ஆதாயம் கிட்டும். திருமணக் காரியம் கைகூடும். கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போகவும். பொருளாதாரச் சிரமம் குறையும். தொலைதூரப் பிரயாணம் செல்ல நேரிடும். வாக்கு வன்மை மேலோங்கும். கல்வி வளர்ச்சி காண்பீர்கள். வியாபாரத்தில் முற்போக்கான நிலை உருவாகும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். உத்தியோகத்தில் மாற்றம் ஏற்படும். புதிய வேலை கிடைக்கும். மனச்சலனம் தீரும். ராகு/கேது/சனி/குரு வழிபாடு செய்து வர, நற்பலன் ஏற்படும்.

**கன்னி:** தனவிருத்தி ஏற்படும் வாரம். வாக்குவன்மை மேலோங்கும். கல்வியில் வளர்ச்சி உண்டாகும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். புண்ணிய ஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்துசேரும். திருமணக் காரியம் கைகூடும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் பெறுவீர். வீடு, வாகனம் வாங்க நல்ல தருணம். வியாபாரத்தில் நல்ல லாபம் கிட்டும். வேலை மாற்றம் ஏற்படும். குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**துலாம்:** பணக் கஷ்டம் தீரும் வாரம். திருமணக் காரியம் கைகூடும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். வழக்கு வெற்றி பெறும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். வேலையில் இடமாற்றம், ஊதிய உயர்வு உண்டாகும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். வீடு/மனை வாங்க நல்ல தருணம். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். பணக்கஷ்டம் விலகும். ராகு/கேது/சனி வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**விருச்சிகம்:** புதிய வேலைவாய்ப்பு வந்து சேரும். வீடு/வேலை மாற்றம் உண்டாகும். குழந்தைகள் வழியில் மன நிம்மதி ஏற்படும். சுபகாரியம் கைகூடும். உடல் நிலை நன்றாக இருக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வெளிநாட்டு அழைப்பு கிட்டும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வீடு, வாகனம் வாங்க நல்ல தருணம். பணக் கஷ்டம் இருக்காது. நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். புதிய முயற்சி கைகூடும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் உண்டாகும். வழக்கு முடிவுக்கு வரும். ராகு/கேது வழிபட்டு வர, நற்பலன் மிகுதியாகும்.

**தனுசு:** மன மகிழ்ச்சியான வாரம். திருமணக் காரியம் கைகூடும். தெய்வ பலம், ஆத்மபலம் நிறைந்து இருக்கும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். கல்வியில் முன்னேற்றம் உண்டாகும். பணக் கஷ்டம் விலகும். குழந்தைகளால் மன

# நடக்குமென்பார்; நடக்கும்!

**29.10.2006 முதல் 4.11.2006 வரை**

மகிழ்ச்சி உண்டாகும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். வெளிநாடு செல்லும் பாக்கியம் உண்டாகும். வீடு/வாகனம் வாங்க நல்ல காலம். குரு/சனி வழிபாடு செய்வது நல்லது.

**மகரம்:** தடை விலகித் திருமணம் கைகூடும் வாரம். வாக்கு, தனம், கல்வி மேலோங்கும். கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நற்பலனைத் தரும். வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வேலையில் நற்பெயர் ஏற்படும். புதிய தொழில் துவங்க நல்ல காலம். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். ராகு/கேது/சனி வழிபட்டு வர, நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** சந்தோஷம் மிகுந்த வாரம். பணக்கஷ்டம் தீரும். நீண்ட காலம் முடிவு பெறாத பிரச்னைகள் முடிவுக்கு வரும். வாக்கு வன்மை மேலோங்கும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். வேலையில் நற்பெயர் கிட்டும். வெளிநாட்டுப் பணி கிடைக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி நடக்கும். கல்வியில் வளர்ச்சி காண்பர். வியாபாரத்தில் ஏற்றம் உண்டு. ராகு/கேது/குரு வழிபாடு உத்தமம்.

**மீனம்:** மகிழ்ச்சிகரமான வாரம். மனப் பிரம்மை தீரும். தனம், வாக்கு, கல்வி வளம் மேலோங்கும். தூரதேச அழைப்பு ஏற்படும். தடை விலகித் திருமணம் கைகூடும். வீடு/வாகனம் வாங்க நல்ல காலம். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தைகளால் மனமகிழ்ச்சி ஏற்படும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வழக்கு வியாபாரம் வெற்றி அளிக்கும். உடல்நிலை சீராகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வேலையில் ஊதிய உயர்வு, இடமாற்றம் உண்டாகும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். ஆஞ்சநேயரை வழிபாடு செய்து வரவும்.

## பரத்வாஜ் பதில்கள்...

● **என் மகளுக்கு எப்போது திருமணம் நடக்கும்? வரன் எப்படி அமையும்?**

**- கமலா ரகுநாதன், சென்னை - 28**

உங்கள் பெண்ணுக்கு 2007-ல் திருமணம் நடக்கும். சர்ப்பதோஷம் உள்ள வெளிநாட்டு வரனைப் பார்க்கவும். தென் திசையில் பிறந்த, நன்கு படித்த, உடன் பிறப்பு ஒருவர் உள்ள இடத்தில் திருமணம் நடக்கும்.

● **என் பையனுக்குச் சொந்தத் தொழில் நன்றாக நடக்குமா? திருமணம் எப்போது நடக்கும்?**

**- ச.கு.கனகசபாபதி, ஈரோடு - 9**

உங்கள் பையனுக்குச் சொந்தத் தொழில் செய்யும் யோகம் இல்லை; நஷ்டம்தான் வரும். உத்தியோகம் நன்றாக இருக்கும். 33 வயதில் திருமணம் கைகூடும். சர்ப்ப தோஷம் உள்ள வரனைப் பார்க்கவும். வெளியூரில் பிறந்த பெண் வாழ்க்கைத் துணைவியாக அமைவாள். உறவு கிடையாது. உடன்பிறப்பு ஒருவர் இருப்பார்.

● **என் தங்கைக்கு எப்படிப்பட்ட வரன் அமையும்? எப்போது திருமணம் நடக்கும்?**

**- கே.எம்.சங்கர், விளாத்திகுளம்**

உங்கள் தங்கைக்கு 24 வயதில் திருமணம் நடக்கும். பிறந்த ஊருக்குத் தென்திசையில் பிறந்த, உடன்பிறப்பு ஒருவர் உள்ள இடத்தில், நல்ல வேலையிலுள்ள வரன் அமையும்; உறவு கிடையாது. பரிகாரம் தேவையில்லை.

● **எங்கள் வீடு எங்கள் வசம் நிலைக்குமா? கடன்கள் எப்போது அடையும்? வேலையிலுள்ள குழப்பம் எப்போது தீரும்?**

**- எஸ். சுரேஷ், சென்னை -33**

உங்கள் ஜாதகப்படி கேது மஹாதசை நடைபெறுகிறது. 26.6.2007 வரை மிகவும் கஷ்டமான காலம். வீட்டை விற்றுக் கடனை அடைப்பது நன்மை! நற்பலன் நடக்கும் வரை பொறுமை காக்கவும். பிள்ளையாரை வழிபடவும்.

தமிழச்சி

சப்பாத்திக் கள்ளிகளில்
சிக்குண்ட சரிகைப் பாவாடையின்
ஓரமென நைந்திருக்கிறது மனம்
சிக்கெடுத்து நீவி நெடுமூச்சுடன்
உச்சி முகர
புகையிலை நெடிக்கும்
மூதாட்டியின் முத்தமின்றி
வறண்டிருக்கின்றன
முன்நெற்றியும்
முடிக்கற்றைகளும்
காய்ந்த இலந்தைக்
கொட்டைகளென
இக்கரிசலின் வெக்கை
என் கனவுகளைத் தீய்க்குமுன்
வந்தென்னைப் பெயர்த்து
காட்டாமணக்கும் நொச்சியும்
மணக்கும் நீர்க் கசியும் வரப்பில்
சறுக்கிப்போன
நம் பால்யத்தின்
தடங்கள் நடுவே
பதித்து விட்டுப்போ.

# பதியம்

## கேட்டரிங்

ரமேஷின் நண்பர்கள் அனைவரும் சாஃப்ட்வேர் தொடர்பாகத்தான் படித்துக் கொண்டிருந்தார்கள். படித்து முடித்தவுடன் 'ஜாம் ஜாம்' என்று வாழ்வோம் என்று ரமேஷிடம் அடிக்கடிச் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்வார்கள். ஆனால், ரமேஷுக்கு அவன் எதிர் காலத்தை இதுபோலக் காட்சிப்படுத்த முடியவில்லை. தாம் கேட்டரிங் படிப்பதைக் கூட வெளியே சொல்லக் கூச்சப்பட்டான். 'கரண்டி பிடிக்கிற வேலையா? பாரில் வேலை செய்யப் போகிறாயா?' என்று அவனைப் பலரும் கேலி செய்ததுதான் காரணம். ஆனால் ரமேஷின் படிப்பு முடிந்த பிறகு எல்லாக் காட்சிகளும் தலைகீழாயின. இறுதியாண்டு படிப்பின்போதே கேம்பஸ் இண்டர்வியூவில் தேர்வாகி நல்ல வேலை கிடைத்தது ரமேஷுக்கு. வருடத்துக்கு ஒன்பது லட்ச ரூபாய் சம்பளம். வருடத்துக்குப் பத்து மாதங்கள் கப்பலில் பயணம்; இரண்டு மாதங்கள் விடுமுறை. இன்று தம் நண்பர்களைக் காட்டிலும் சௌக்கியமாக இருக்கிறான் ரமேஷ்.

இது ஒன்றும் கற்பனைக் கதை அல்ல; இன்று கேட்டரிங் படித்த மாணவர்களின் வாழ்க்கையில் சர்வசாதாரணமாக நடப்பதுதான்! கேட்டரிங் மற்றும் ஹோட்டல் மேனேஜ்மெண்ட் சம்பந்தமான படிப்பைப் படிக்க பலரும் கூச்சப்படும் இக்காலகட்டத்தில் இந்தப் படிப்புக்குத்தான் எத்தனை விதமான வேலை வாய்ப்புகள்! எத்தனை விதமான சௌகரியங்கள்!

கேட்டரிங் என்பது சமையல் கலையைப் பற்றிய படிப்பு கிடையாது. ஆயிரத்து இருநூறு மதிப்பெண்களில் நூறு மதிப்பெண்கள்தான் சமையல் கலைக்குக் கொடுக்கப்படுகிறது. மீதிப் பாடங்கள் ஹோட்டல் நிர்வாகத்தைப் பற்றியவை. அதேபோல இந்தப் படிப்பைப் படித்தவர்கள் கரண்டியைப் பிடித்துத்தான் வேலை செய்யவேண்டும் என்கிற அவசியமில்லை. அவரவர் விருப்பத்துக்கேற்றவாறு வேலையைத் தேர்வுசெய்து கொள்ளலாம்.



'செஃப்' தாமு, முதல்வர், எம்.ஜி.ஆர். இன்ஸ்டிடியூட் ஆஃப் ஹோட்டல் மேனேஜ்மெண்ட்

இந்தத் துறையில் மட்டும்தான் நிறைய வாசல்கள் உள்ளன. டூரிஸம், ரயில்வே, ஸ்டார் ஹோட்டல், விமானம், கப்பல் எனப் பல்வேறு இடங்களில், கேட்டரிங் படித்தவர்களுக்கு வேலைகள் காத்துக் கிடக்கின்றன. சமையல் பணி வேண்டாம் என்கிறவர்கள் ஹோட்டல் நிர்வாகம், வரவேற்பறை, ஆசிரியப் பணி,

# வாரம் ஒரு வேலை



மார்க்கெட்டிங், மனிதவள மேம்பாடு என்று இத்துறையோடு சம்பந்தமுள்ள வேலைகளில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளலாம். ஆரம்பச் சம்பளம் பத்தாயிரம் முதல் ஐம்பதாயிரம் வரை கிடைக்கும். கேட்டரிங்கில் டிகிரி, டிப்ளமோ என்று இருநிலைப் படிப்புகள் உள்ளன. சென்னை (தரமணி) மற்றும் திருச்சியில் அரசுப் பயிலகங்கள் உள்ளன. மேலும் பன்னிரண்டு அரசு அனுமதி பெற்ற தனியார் பயிலகங்களும் உள்ளன.

சாஃப்ட்வேர் துறையில் எல்லோருக்கும் நல்ல வேலை கிடைத்து விடும் என்று சொல்லிவிட முடியாது. அறிவாளிகளுக்கு மட்டுமே வளமான எதிர்காலம் இருக்கும். ஆனால் கேட்டரிங் துறையில் படிப்பு முடித்த அனைவருக்கும் நூறு சதவிகிதம் வேலைக்கும் கலர்ஃபுல் எதிர்காலத்துக்கும் உத்தரவாதம் உண்டு.



# ஆண்டுக்கு 9 லட்சம் சம்பளம்!

**த**மிழ்நாட்டிலுள்ள பதினான்கு கேட்டரிங் கல்லூரிகளில் இருந்து (அரசு மற்றும் தனியார்) வருடத்துக்கு வெளியே வரும் மாணவர்களின் எண்ணிக்கை சுமார் ஆயிரம். இதில் தமிழ்நாட்டில் உள்ள ஹோட்டல்களில் மட்டும் வருடத்துக்கு ஒன்பதாயிரம் கேட்டரிங் படித்த மாணவர்கள் தேவைப்படுகிறார்கள். இதனால் இன்றைக்கும் தமிழ்நாட்டில் உள்ள இருபத்தொன்பது ஹோட்டல்களில் ஆள் குறைபாடு இருந்து வருகிறது. தமிழ்நாட்டிலேயே இப்படி என்றால் இன்னும் இந்தியாவிலுள்ள இதர ஹோட்டல்களில், வெளிநாடுகளில்...?

போலீஸ், ஆசிரியர்களைப் போல கேட்டரிங் படித்தவர்களுக்கு அரசு வேலையும் (ரயில்வே) தாராளமாகக் கிடைத்து வருகிறது. நான் முதல்வராகப் பணிபுரியும் கல்லூரியில் ஒவ்வொரு வருடமும் படிப்பு முடியும் முன்பே அனைத்து மாணவர்களுக்கும் வேலை உத்தரவாகிவிடும். இதில் பாதி மாணவர்களுக்குக் கப்பலில் பணியாற்றும் சந்தர்ப்பம் கிடைக்கிறது.

பலருக்கு இந்தத் துறையைப் பற்றி விழிப்புணர்ச்சி இல்லை. பெண்கள் நிறைய தயங்குகிறார்கள். சென்னையைவிட சிற்றூர்களிலிருந்து படிக்க வருபவர்கள் தான் அதிகம். இந்நிலை மாற வேண்டும்.

வேலைப் பாதுகாப்பு என்று வரும் போது மனித குலம் அழியும் வரை இந்தத் துறைக்கு ஆபத்தில்லை. தேசத்தின் ஜனாதிபதியாக இருந்தாலும் மதியம் ஒரு மணியானால் பசி வயிற்றைக் கிள்ளத் தானே செய்யும்!

சந்திப்பு : **ச.ந.கண்ணன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

**மா**ர்கழி மாதம் பிறந்துவிட்டாலே, எங்கள் ஊரான மல்லாங்கிணற்றில் வைகறையிலேயே பக்திப் பரபரப்பு தொற்றிக்கொண்டு விடும். பெண்கள் கையில் பூக்களுடனும் பெரியவர்கள், திருமண்ணுடனும் பெருமாள் கோயிலுக்குச் சென்றுகொண்டிருப்பார்கள். ஸ்பீக்கரில் ஆண்டாளின் திருப்பாவை அதிகாலை வேளையை இன்னமும் செழுமையாக்கும். வாண்டுகளாகிய நாங்கள் கோயிலில் சுற்றிக் கொண்டிருப்போம். கோயிலை ஒட்டினாற்போலேயே எங்கள் வீடு. பட்டர் மாமாவுக்கு அவ்வப்போது உதவிக் கொண்டிருந்தாலும் மடப்பள்ளியில் நெய் மணத்தோடு தயாராகும் வெண்பொங்கல் பக்கமும் எங்கள் பார்வை இயல்பாகவே போய் வரும்.கோயிலிலிருந்து பஜனை துவங்கி மீண்டும் கோயிலுக்கு வந்து சேரும். அங்கே பொங்கலை வாழையிலையில் வைத்துக் கொடுத்தாலும், அதையும் மீறி பொங்கல் சூடு லேசாக உள்ளங்கையில் ஒத்தடம் கொடுத்தாற்போல் உணர்வை ஏற்படுத்துவது அந்த மார்கழிக் குளிருக்கு மிகவும் பொருத்தமாக இருக்கும்.

நான் பிறக்கும்போதே எங்கள் அப்பா தங்கபாண்டியன் ஊரின் முக்கிய வி.ஐ.பி. திராவிட இயக்கக் கொள்கையில் தீவிரப் பிடிப்புள்ள நாத்திகவாதி. ஆனால் சிறுவனாக இருந்த போது நான் கோயில் பணிகளில் பங்கேற்றது குறித்து அவர் எந்த ஆட்சேபனையும் சொன்னது கிடையாது. அப்பாவுடைய அரசியல் வழிகாட்டி ராமநாதபுரம் மாவட்டத்தில் கழகத்தைக் கட்டி வளர்த்த தென்னரசுதான். அவர் நினைவாகத்தான் எனக்கும் தென்னரசு என்று அப்பா பெயர் வைத்தார். அம்மா - அப்பா இரண்டு பேரும் ஆசிரியர்கள். இதனால் வீட்டில் ஒழுங்கும், கட்டுப்பாடும் தானாகவே அரங்கேறிவிட்டன. அக்கா சுமதியை ஹாஸ்டலில் தங்கிப் படிக்க அனுப்பி விட்டார்கள். அப்பா பொது வாழ்க்கையில் பிஸியாக இருக்க, நான் அம்மா செல்லமாகி விட்டேன்.



# கன்னத்தில் விழுந்த அறை!

**எ**ன் பள்ளிப் படிப்பில் திருப்புமுனை ஒன்பதாம் வகுப்பில் நிகழ்ந்தது.

**தமிழக பள்ளிக் கல்வித் துறை அமைச்சர் தங்கம் தென்னரசு**

# துள்ளித் திரிந்த காலம் 3



ஊரிலுள்ள அரசு உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன். என்ன காரணம் என்று இப்போது நினைவில்லை. டிரில் மாஸ்டர் பளாரென்று கன்னத்தில் அறைந்து விட்டார். பையைத் தூக்கிக்கொண்டு நேராக வீட்டுக்கு வந்துவிட்டேன். 'இனிமேல் அந்தப் பள்ளிக்குப் போக மாட்டேன்' என்று சொல்லிவிட்டேன். அதன் பிறகு செந்தில் நாடார் பள்ளியில் சேர்த்து விட்டார் அப்பா. எனக்கு நீச்சல் கற்றுக் கொடுத்தவர் தமிழ் ஆசிரியர் ரங்கசாமி. தேவர்கிணறு என்ற பெரிய கிணறு ஊருக்கருகில் இருந்தது. கிணற்றுக்கு மேல் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த என்னை டபாரென தள்ளிவிட்டு விட்டார் தமிழாசிரியர். அப்படித்தான் எனக்கு நீச்சல் பாடம் துவங்கியது. பிறகு ஒருநாள், நீச்சல் கற்றுக்கொண்ட கர்வத்தில் ஊருக்கு ஐந்து கி.மீ. தொலைவில் உள்ள குண்டாறில் விளையாட நண்பர்களுடன் போய்விட்டேன். இதற்குள் செய்தி அப்பாவைச் சென்றடைந்துவிட்டது. திரும்பி வந்தால், கன்னத்தில் விட்டார் ஓர் அறை. அதன் பின் குண்டாறுக்கு குட்பை சொல்லிவிட்டேன்.

ஊருக்குள் ஒரு டூரிங் டாக்கீஸ் இருந்தது. அதில் 'தில்லானா மோகனாம்பாள்' படத்தை எத்தனை முறை பார்த்திருப்பேன் என்ற கணக்கே கிடையாது. நினைத்தபோது போய் கொட்டாயில் அமர்ந்துவிடுவேன். அது எங்க டூரிஸ் டாக்கீஸ் ஆயிற்றே!

## வாழ்வின் மறக்க முடியாத நாட்கள் பற்றிப் பிரபலங்கள் பேசும் பகுதி

ப்ளஸ் ஒன் மற்றும் ப்ளஸ் டூ படிப்பு ஆறு கி.மீ. தொலைவில் உள்ள ஜோகில்பட்டி மேல்நிலைப்பள்ளியில். கையில் டப்பா சாப்பாட்டுடன் ஸ்கூலுக்கு நண்பர்கள் புடைசூழ அரட்டை அடித்தபடி சைக்கிளில் செல்வேன். வழியில் கல்குறிச்சி என்ற இடத்தில் ஒரு கடையில் ஜீரா தோசை போடுவார்கள். அதை ஒரு பிடி பிடிப்போம். பள்ளி நூலகத்தில் எனக்கு அறிமுகமானவர்தான் கல்கி. அவரது பொன்னியின் செல்வனையும், சிவகாமியின் சபதத்தையும் பலமுறை படித்திருக்கிறேன். பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், அண்ணா, கலைஞர் நூல்கள் என்று என் இலக்கிய ஆர்வம் விஸ்தரித்துக்கொண்டே போனது ப்ளஸ்டூ முடிக்கும்போதுதான்.

அண்ணாமலையில் மெக்கானிக்கல் பிரிவில் பொறியியல் சேர்ந்துவிட்டேன். விடுமுறை நாட்களில் தனியாகவே தஞ்சை மாவட்டத்துக்கு டூர் அடிக்கச் சென்றுவிடுவேன். பொன்னியின் செல்வனில் குறிப்பிடப்பட்டுள்ள வீராணம் ஏரி, தஞ்சை பெரிய கோயில், கோடியக் கரை காடு என்று புறப்பட்டுவிடுவேன். நானே வந்தியத்தேவனாக மாறி வீராணம் வரையில் உலவிக் கொண்டிருப்பேன். பொன்னியின் செல்வனைப் படமெடுக்கும் உரிமையை 'கல்கி' ராஜேந்திரனிடமிருந்து எம்.ஜி.ஆர் வாங்கி வைத்திருப்பதாக அப்போது ஒரு பத்திரிகையில் செய்தி வந்திருந்தது. உடனே ஒரு இன்லண்ட் கடிதம் வாங்கி, "தயவுசெய்து அந்த உரிமையை எம்.ஜி.ஆரிடமிருந்து திரும்பப் பெற்று விடுங்கள். எம்.ஜி.ஆரை வந்தியத்தேவனாக கொஞ்சம்கூட கற்பனை செய்து பார்க்க முடியவில்லை" என்று 'கல்கி' ராஜேந்திரனுக்குக் கடிதம் எழுதிவிட்டேன்.

கலைஞர் அரசில் அமைச்சராக இருந்து மறைந்த அப்பாவுக்கு நான் அரசியலுக்கு வருவதில் ஆர்வம் கிடையாது. அவர் மறைந்த பிறகு தலைவர் வீட்டுக்கு வந்திருந்தார். 'தேர்தலில் நில்' என்று சொன்னதோடல்லாமல், என் பெயரோடு தங்கத்தைச் சேர்த்து 'தங்கம்' தென்னரசு ஆக்கிவிட்டார்!

சந்திப்பு: **ப்ரியன்**

படம்: **ராஜன்**

டாக்டர். எல். மஹாதேவன்

# உடலுக்குள்ளே

பொதுவாக எல்லா வகை ஜ்வரங்களிலும் மலச்சிக்கல், நீர்க்கடுப்பு, உறக்கமின்மை போன்றவை அழையா விருந்தாளிகளாக வரும். ரொம்ப அதிகமாக ஜுரம் அடித்தால் உளறல் விளையும். ஒரு வாரத்துக்கும் மேல் ஜ்வரம் நீடித்தால் பிற நோய்களின் (சிக்கன்பாக்ஸ், மஞ்சள் காமாலை, பொன்னுக்கு வீங்கி) அறிகுறிகள் தென்படுகின்றனவா என்று பார்ப்போம்; பரிசோதனையும் செய்வோம்.

ஜ்வரத்தின் காரணத்தைப் பொருத்தே ஆயுர்வேத சிகிச்சை நிர்ணயமாகும்.

'மாதத்துக்கு மூன்றுமுறை ஜ்வரம் வந்துவிடுகிறது அவனுக்கு' என்று எட்டு வயது மகனை அவன் தாயார் அழைத்து வந்தார். சளி கெட்டித்தட்ட நிரந்தரமாக இருந்தது. குளித்தால் ஜுரம் உடனே வந்து விடுகிறது. இதற்கு ஆயில்ய பட்டை + தசமூலம் சேர்ந்த இந்துகாந்தம் கஷாயம் தந்தேன். அந்தக் கஷாயத்தில் ருத்ராக்ஷ சந்தனம், வசம்பு போன்றவற்றைச் சேர்த்து கோரோசனாதிவடி தயாரித்துச் சேர்த்துத் தந்தேன். வயிற்று மந்தத்தைப் போக்கிப் பசியைத் தூண்ட ரஜன்யாதி சூர்ணம் கொடுக்கப்பட்டது. ஜுரம் விட்டதும், நோய் எதிர்ப்பை அதிகரிக்க ஆறு மாதங்கள் ஷட்பலகிருதம் என்னும் மருந்து கைகொடுத்தது.

இந்தப் பகுதியில் பல மருந்து பெயர்களை நான் குறிப்பிடுகிறேன் என்பதற்காக அவற்றை நீங்களே வாங்கி சொந்த வைத்தியம் செய்து கொள்ளக் கூடாது. வீட்டிலே செய்துகொள்ளக் கூடிய கை வைத்தியங்களை அவ்வப்போது நானே தனியே சொல்கிறேன். அவற்றை மட்டும் முயன்று பாருங்கள்.

சில சமயங்களில் அவசரத் தேவைக்கு நாங்களே ஆங்கில மருத்துவரிடம் அனுப்பி வைப்பதுண்டு. உதாரணமாக, குழந்தைகளுக்கு வரும் நிமோனியா காய்ச்சலுக்கு ஆங்கில மருத்துவமே சிறந்தது. ஆனால், மஞ்சள் காமாலை, லெப்டோஸ்பைரோஸிஸ் போன்ற கடும் தொற்று நோய்களுக்கு ஆயுர்வேதத்தில் சிறந்த சிகிச்சையும் நிவாரணமும் உண்டு.

லெப்டோஸ்பைரோஸிஸ் கண்ட ஒருவருக்கு, ஆடாதோடை, சிற்றமிர்து கலந்த வாஸா குடூச்யாதிக் கஷாயம், வில்வ வேர் சேர்ந்த வில்வாதிக் குளிகை ஆகியவை நல்ல பயனளிக்கும்.

எல்லா ஜ்வரங்களுக்கும் பொதுவாகக் கடைபிடிக்க வேண்டிய கட்டுப்பாடுகள் சில உண்டு:

உபவாசம் - அதாவது உணவுக்கட்டுப்பாடு – ரொம்ப முக்கியம். இலகுவாக ஜீரணமாகக்கூடிய கஞ்சி போன்ற உணவைச் சாப்பிட வேண்டும். தயிர், எண்ணெய்ப் பண்டங்கள், அசைவம் கூடவே கூடாது! (குழந்தைகள், கர்ப்பிணிகள் இதற்கு விதிவிலக்கு. இவர்கள் மருத்துவர் சொல்படி சாப்பிடலாம்.)

வாத - கப ஜுரங்களுக்குச் சிறிது சிறிதாக வெந்நீர் பருக வேண்டும்.

பித்தம் காரணமாக ஜுரம் அதிகரிக்கும். ஆகவே பித்தத்தைத்

தூண்டும் விஷயங்கள் தவிர்க்கப்பட வேண்டும்.

எண்ணெய்த் தேய்த்துக் குளிக்கக் கூடாது.

## தேவமருந்து - 2



# நெருப்பு!

ஆயுர்வேதத்தில், ஒவ்வொருவித ஜுரத்துக்கும் தனித்தனிக் கஷாயம் உள்ளது. பொதுவாக ஆரம்ப நிலையில் மருந்து மாத்திரைகள் தராமல் கஷாயம், ஒத்தடம் என்று கொடுத்து ஜுரத்தைக் குறைப்போம்.

சுக்கு, மிளகு, திப்பிலி, மாதுளம்பழச் சாறு, பொரி, பொடி அரிசி - இவற்றைச் சேர்த்து கஞ்சி தயாரித்து ஜுரக்காரர்களுக்குக் கொடுக்கலாம்.

மலத்தடையிருந்தால் இதே கஞ்சியுடன் திப்பிலி, நெல்லிமுள்;

வயிற்றுப்போக்கு எனில், இக்கஞ்சியுடன் வில்வ வேர், கொத்துமல்லி;

சிறுநீர்ப் பையில் வலி, தலைவலிக்கு இதே கஞ்சியில் நெருஞ்சிமுள்

என்று வேறுபடுத்திக் கொடுப்பது ஆபத்தில்லாத கை வைத்தியம்.

ஜுரம் கண்டவர்கள் வீட்டில் இருந்தால் கிருமிகள் பெருக்கும் பரவும் அல்லவா? இதற்கு குக்கில் (அபராஜித தூமம்), வசம்பு, எருக்கு, தேவதாரு போன்றவற்றைப் பொடித்துத் தணலில் போட்டுப் புகையூட்டினால் நல்ல சுத்திகரிப்பு நிகழும்.

வெயில் காலத்தில் ஜுரம் வந்தவர்களுக்கு வெந்நீர் குடிப்பது வெறுப்பாக இருக்கும். இதற்குப் பதிலாக கோரைக்கிழங்கு, சந்தனம், சுக்கு, பார்படப்புல், வெட்டிவேர், விளாமிச்சை வேர் - இவற்றை முப்பது கிராம் எடுத்து ஒரு லிட்டர் நீரில் கொதிக்க வைத்து, வடிகட்டிப் பயன்படுத்தலாம்.

மந்திரங்கள் ஜபிப்பதும் சிறப்பு. இரத்தினக்கற்கள் அணிவதும்கூட ஜுரத்துக்குக் கூடுதல் சிகிச்சையாகச் சொல்லப்படுகிறது.

எல்லாவற்றையும்விட ஏற்கத்தக்கதும் மனத்துக்கு இதமானதுமான

சிகிச்சை விஷ்ணு சஹஸ்ரநாம பாராயணம். இதைப்போன்ற இறை சார்ந்த சிகிச்சைகள் ஆயுர்வேதத்தில் அனேகம் உள்ளன.



சிலருக்கு ஜ்வரத்தின்போது, மலச்சிக்கல் தோன்றும். அந்த மலச்சிக்கலுக்குக் காரணம் உடலில் அக்னியின் சமச்சீரற்ற நிலையே!

நம் உடலுக்குள் இறைவன் உறைகிறான் என்று பெரியவர்கள் சொல்வார்கள் இல்லையா? பகவத் கீதையில் இதையே பகவான் கிருஷ்ணன் ரொம்ப 'ஸ்பெஸிஃபிக்'காகச் சொல்கிறான் :

"உடலில் உணவைச் செரிக்கின்ற அக்னியாக நான் இருக்கிறேன்."

இந்த அக்னியையே ஆயுர்வேதம் பித்தம் என்று குறிப்பிடுகிறது - அக்னியின் தன்மை சீராக இருக்கிறபோது ஜீரணமும் பசியும் சரியாக இருக்கின்றன. ஆனால், அக்னி - பித்தம் - அதிகமாகிறபோதோ அல்லது குறைகிறபோதோ அல்லது வேறு காரணங்களுடன் இணைகிறபோதோ பிரச்னைகள் ஆரம்பிக்கின்றன.

அக்னியின் சமச்சீரற்ற தன்மைகளை மந்தாக்னி, தீக்ஷ்ணாக்னி, விஷமாக்னி என்று மூன்று விதமாகப் பிரிக்கிறது ஆயுர்வேதம்.

மந்தாக்னி பாதிப்பு எனில் கொஞ்சமாகச் சாப்பிட்டாலும் செரிக்காது. தீக்ஷ்ணாக்னி நேர்மாறாக, சாப்பிடச் சாப்பிட அதிக பசியை ஏற்படுத்தும்; விஷமாக்னியோ மற்ற இரு நிலைகளுக்கிடையில் மாறி மாறி ஊசலாடச் செய்யும்!

பொதுவாக இந்த அக்னியின் பேலன்ஸைக் குலைக்கும் காரியத்தை நாம்தான் செய்கிறோம்.

காலம் தவறி உண்பது;

ஒவ்வாத உணவுகளைச் சாப்பிடுவது;

எண்ணெய்ப் பலகாரங்களைத் தின்பது;

தேவைக்கதிகமாகத் தண்ணீர் குடிப்பது;

கழிவறைக்குக் காலத்தில் செல்லாமல் அடக்குவது;

மன அழுத்தத்துக்கு இடங்கொடுப்பது - ஆகிய எல்லாமே உடல் அக்னியை அலைக்கழிக்கும்; கொலஸ்ட்ரால் அதிகரிப்புக்கான காரணிகளும் இவையே!

அக்னி வேறுபாடுகள் காரணமாகத் தோன்றும் உபாதையை க்ரஹணி என்று அழைக்கிறது ஆயுர்வேதம். அதற்கு நிவர்த்தி...? அடுத்த வாரம் சொல்கிறேன்.

(தொடரும்)

## தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி - II

வயிற்றுப்போக்கை நிறுத்த கை வைத்தியமாக ஏதேனும் வீட்டுப் பொருள்களைப் பயன்படுத்திப் பலன் கண்டதுண்டா...? உங்கள் அனுபவத்தை எழுதி (அஞ்சல் அட்டையில் மட்டும்) 'தேவ மருந்து II' என்று குறிப்பிட்டு, கல்கி அலுவலகத்துக்கு அனுப்புங்கள்.

மிகச் சிறந்த கை வைத்திய குறிப்புகள் இரண்டு,

டாக்டர் எல். மஹாதேவனால் தேர்வு செய்யப்படும்.

**தன்வந்தரி வெள்ளி டாலரும், தேவ மருந்து பகுதி - I புத்தகமும்**

முறையே முதல், இரண்டாவது பரிசுகளாக இவற்றுக்கு வழங்கப்படும்.

ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

கடைசி தேதி : **6.11.06**



ஒரிசாவில் சில மாதங்களுக்கு முன் புதியாசிங் என்ற சிறுவன் மாரத்தான் ஓட்டம் ஓடியது பெரும் சர்ச்சையினை ஏற்படுத்தியதல்லவா? இப்போது, திலிப் ராணா என்ற பன்னிரண்டு வயதுச் சிறுவன், தானும் மாரத்தான் ஓடப் போவதாக அறிவித்து, மாவட்ட நிர்வாகத்திடம் அனுமதி கோரினான். மாவட்ட நிர்வாகம் அனுமதி மறுத்துவிட்டது. ஏமாற்றமடைந்த திலிப் ராணா, காந்திய முறையில் தம்முடைய எதிர்ப்பைத் தெரிவிக்க முடிவு செய்தான். ஒரு நாள் அதிகாலை ஐந்து மணிக்கு உள்ளூர் மைதானம் ஒன்றில் தம்முடைய எதிர்ப்பு ஓட்டத்தைத் துவக்கி, பிற்பகல் ஒரு மணிவரை சுற்றிச் சுற்றி எண்பத்தொரு கிலோமீட்டர் தூரம் ஓடினான். அதன்பின் கால்கள் வலிக்கவே, ஓட்டத்தை நிறுத்தினான். இன்னும் சில சிறுவர்களும் இதுபோலச் செய்ய முயல்கிறார்களாம்!

தமிழுக்குச் செம்மொழி அந்தஸ்து கிடைத்ததைப் போன்று இப்போது தெலுங்கு மொழிக்கும் அந்த அந்தஸ்து வழங்கப்பட வேண்டுமென்ற கோரிக்கை எழுந்துள்ளது. கடந்த பிப்ரவரி மாதத்தில், ஆந்திர சட்டசபையில் இந்தக் கோரிக்கையை வலியுறுத்தித் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. ஆனால், மத்திய அரசு சீரியசாக அதை எடுத்துக்கொள்ளவில்லை. தெலுங்கானா பிரச்னை மீண்டும் எழுந்துள்ள சூழ்நிலையில், இந்தச் செம்மொழிக் கோரிக்கையினை மத்திய அரசு ஏற்றுக்கொள்ளும் என்று எதிர்பார்த்து சில அரசியல்வாதிகள் மீண்டும் வலியுறுத்தத் துவங்கியுள்ளனர்.

இந்தச் சிரஞ்சீவி எழுத்தாளருக்கு இது நூற்றாண்டு. உலகமெங்கும் உள்ள இலக்கிய ரசிகர்கள் இதனைக் கொண்டாடுகிறார்கள். அவர் வாழ்ந்த மைசூரில் ஒரு நிகழ்ச்சி நடத்தப்பட்டது. அதன் ஓர் அங்கமாக அந்த நிகழ்ச்சிக்கு வந்திருந்த அனைவரும், மைசூரில் நாராயண் வாழ்ந்த வீட்டுக்குச் சென்று சில மணி நேரம் இருந்து, அவரது நினைவைப் போற்றிவிட்டு சென்றார்கள்.



# நாராயண் வீடு எங்கே?

மால்குடி என்றதும் இன்றைய இளைய தலைமுறைக்கு வேண்டுமானால், திரைப்படப் பாடகி சுபா ஞாபகம் வரலாம். ஆனால் இலக்கிய ஆர்வலர்களுக்கு ஞாபகம் வருபவர் மால்குடி என்ற கற்பனை ஊரினை சிருஷ்டித்த ஆர்.கே.நாராயண். சென்னையில் வசித்தபோது நாராயண், புரசைவாக்கத்தில் இருந்தாராம்! அவர் வாழ்ந்த அந்த வீடு இப்போது இருக்கிறதா? இல்லை, அடுக்கு மாடிக் கட்டடம் ஆகிவிட்டதா?

- எஸ்.சி.எம்.




டைரக்டர் பேரரசோட ஃபார்முலா தப்பாம வந்திருக்குற விஜயகாந்த் படம். அரசியலுக்கு என்ட்ரி ஆயிட்ட வரை அடுத்த கட்டத்துக்கு அழைச்சிட்டுப் போறதுக்குப் பாலமா அமைஞ்சிருக்கற படம்.

விஜயகாந்த் நடிப்புல ஆக்ரோஷம் பொங்கிப் பிரவகிச்சாலும் பழைய டச் மிஸ்ஸிங். பாசத்துக்குக் கட்டுப்படும் போதெல்லாம் உருக வச்சிடுறார். லஷ்மிராய் தன்னை குதிரைன்னு சொல்லிக்குறாங்க, உண்மைதான். அவர் மேல என்ன கோபமோ, டைரக்டர் நடிக்க வாய்ப்பே தரல. ஆனா என்ன பாசமோ தெரியல, எம்.எஸ்.பாஸ்கரை ரெண்டாவது கதாநாயகனா உலவ விட்டிருக்கார் பேரரசு. அதை சிறப்பா உள்வாங்கின பாஸ்கரும் சிரத்தையா பண்ணியிருக்காரு. 'காமெடி ஸ்பெஷல்'னு சப் டைட்டில் போடுற அளவுக்கு படம் நெடுக லகலகலக.... கொஞ்ச நேரம் வந்தாலும் நெஞ்சு நிறைஞ்சு போகுது விஜயகுமார் நடிப்புல.

கண்ணி வெடி வச்சு எதிரிகளை விரட்டறது, உயிலை வச்சு வில்லன்களை வாட்டறதுன்னு பல டெக்னிக் பேரரசுவோட பெருமைய பறைசாற்றினாலும் தாக்க வந்த குண்டைத் திருப்பிவிட்டு விஜயகாந்த் எதிரியைச் சாகடிக்கறதும், ஒருத்தனைத் தள்ளிவிட்டு அம்பது பேரை விழவைக்கறதும் காதுல பூமாலைங்கோ!

இரைச்சல் தேவா... சாரி இசை, ஸ்ரீகாந்த் தேவா. பாடல்கள் எல்லாம் குத்து.. இல்லாம போச்சு சத்து!

கொண்டமூக்கனா வர்ற புது வில்லனுக்கு எதிர்காலம் இருக்கு. மக்களைப் பார்த்து கேப்டன் பேசுற வசனங்கள்ல பயங்கர பிரசார நெடி. தே.மு.தி.க. கொடி படம் போட்ட மோதிரத்தையெல்லாம் பார்க்கறப்போ கட்சியோட கொள்கை விளக்கப் படத்துக்கு வந்துட்டோமோங்கற சந்தேகம் எழாம இல்ல.

# விமர்சனம்



பன்னாட்டுப் பகாசுர மருந்து கம்பெனிகிட்ட கோடிக்கணக்குல டாலர் வாங்கிக்கிட்டு, மக்களைக் கூட்டம் கூட்டமா கொல்ற பயோ வைரஸ் மருந்தைக் குப்பத்து ஏழை ஜனங்க மேல சோதனைப் பண்ணிப் பாக்குற பேஜாரான வில்லன்... அடாவடி வேலைங்க பண்ணி வயத்தைக் கழுவுற ஹீரோ.... ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்ல டான்ஸ் ஆடி வாழ்ந்தாலும் உடம்பும் மனசும் ஒருத்தனுக்குத்தான்னு உளமார நேசிக்குற கதாநாயகி... இப்படி ஒவ்வொரு கேரக்டரையும் யதார்த்தமா செதுக்கியிருக்காரு டைரக்டர் எஸ்.பி.ஜனநாதன்.

'ஈ'யாவே வாழ்ந்திருக்காரு ஜீவா. லவ் பண்ணுற பொண்ணுகிட்டயே 'கை நிறைய துட்டு கெடைக்கும் பாலியல் தொழிலுக்குப் போறியா'ன்னு கேக்கறதாகட்டும், உண்மையெல்லாம் தெரிஞ்சு காதலையே தூக்கியெறிஞ்சுட்டு போராளியா மாறுவதாகட்டும்... பிரமிக்க வச்சிருக்கார். எந்த ஹீரோவும் இந்த மாதிரி ஒரு கேரக்டருல நடிக்கிறதுக்கு ரொம்பவே தயங்குவாங்க. ஜீவா சாதிச்சிட்டாரு.

நயன்தாரா இத்தன நாள் இந்த நடிப்ப எங்க ஒளிச்சு வச்சிருந்தாங்கன்னு தெரியல. இதுலேர்ந்தே அவங்க கணக்கைத் துவங்கலாம். காதலுக்காகவும் காதலனுக்காகவும் துடிக்கிறதும் அது புரிஞ்சுக்கப்படாம போகும்போது வெதும்பி நிக்கறதும்... கனமான பாத்திரத்தை சும்மா லேசாத் தூக்கிச் சுமக்கறாங்க.

பசுபதியோட என்ட்ரியும் பரபரப்பான ஆக்ஷனும் எல்லாரையும் சீட் நுனிக்குக் கொண்டு வந்திருது. 'நெல்லை மணி' கேரக்டர் ரொம்ப நாளைக்கு மக்கள் மனசுல தங்கும். சாகறதுக்கு முன்னாடி ஜீவாவுக்கும் பசுபதிக்குமான உணர்வுபூர்வமான உரையாடல், மனித இதயங்கள மயக்குற வசிய மருந்து.

ஆசிஷ் வித்யார்த்தி பசுத்தோல் போர்த்தின புலி. தன்னோட ஆராய்ச்சிக்காக எந்த எல்லைக்கும் போகத் துடிக்கற அவரோட நடிப்புல துடிப்பு இருக்கு.

சிங்கார வேலர் நகர் குடிசைப் பகுதி, அங்க பாழடைஞ்சு கெடக்கற பழைய காக்கா கோட்டைன்னு பதிவு பண்ணி கேரக்டர்களாவே பிரமாண்டமா மனசுல நிறையறாரு ஒளிப்பதிவாளர் ஏகாம்பரம். கலை இயக்குநரோட பங்கும் ரொம்பவே பலம்.

ஸ்ரீகாந்த்தேவாவோட பின்னணி இசை பிரமாதம். பாடல்களும் சூழலுக்குப் பொருத்தமா அமைஞ்சிருக்கு. சமூகப் பொறுப்புள்ள படத்தை அடித்தட்டு மக்களும் புரிஞ்சுக்கணும்னு கடுமையா உழைச்சிருக்காரு, ஜனநாதன். அதுல அவருக்கு வெற்றி கிடைச்சிருக்கு.

-லஜ்ஜாவதி





## சுகி.சிவம்

எனது இயல்பு வாழ்க்கைச் செயல்பாடுகள் ஒரே வகையாக அமைவதில்லை. நெடுந்தொலைவுப் பயணம், பலவிதப் பணிகள் என மாறி மாறி அமைகின்ற நிகழ்ச்சிகளைச் சந்திக்கின்றவன் என்ற வகையில், என்னுடைய தினசரி நடவடிக்கைகளில் அடிக்கடி மாறுபாடு ஏற்பட்டுக் கொண்டேயிருக்கிறது.

இதைப்போன்ற தினசரிக் கடமைகளைத் தவிர்க்க முடியாததால் உணவு முறையில் தீமை தருவனவற்றை விலக்கித் தவிர்ப்பதுதான் பாதுகாப்பு என உணர்கிறேன்.

காய்கறி அளவு அதிகமாய் இருக்கும் அரிசி உணவு வகைகள், பழ வகைகள், காய்கறி சூப் வகைகள், நேரம் கிடைக்கும் பொழுது நடைப்பயிற்சி என்று கடைப்பிடித்து வருகிறேன். நடைப் பயிற்சியின்போது பேசுவதைத் தவிர்த்து விடுவேன். பேச்சினால் நடையின் கவனம் போய்விடும்.

ஓய்வு நேரங்களில் ஆழ்ந்த சுவாசம் எடுத்துக்கொள்வேன். இது நம்மைப் புத்துணர்ச்சியோடும், மலர்ச்சியோடும் வைக்க உதவும். பிடித்த பணிகளை ஈடுபாட்டுடன் செய்யும்போது மனமும், உடலும் தெளிவுபெறும். அதற்காக காசு பணத்தின் பொருட்டோ, கட்டாயத்தின் பேரிலோ பிடிக்காத பணிகளை ஒப்புக் கொள்வதில்லை.

உயர்ந்த கருத்துகள் நம்மை இளமையாக்கும். வாரியார், கி.வா.ஜ. போன்றவர்கள் தள்ளாத வயதிலும் சுறுசுறுப்போடும், மகிழ்வோடும் இருந்திருக்க, அவர்களின் எண்ண உயர்வே காரணமாயிருந்திருக்கக் கூடும்.

குரலுக்காக நான் சிறப்பாக எதையும் செய்துகொள்வதில்லை. கொதிக்க வைத்து ஆறிய நீர், மினரல் வாட்டர் அருந்துவது, இனிப்பு வகைகளைத் தவிர்ப்பது என்றே இருக்கின்றன என் செயல்கள். இனிப்பு, குரலின் தன்மையைக் கீழிறக்கி விடும்.

உணவு அருந்த முடியாத சூழலில் இளநீர், பழச்சாறுகளை அருந்துவேன். பழச்சாறுகள் இரத்தத்தின் அடர்த்தியைக் குறைத்து நினைவாற்றலை அதிகரிக்க வைக்கும். பட்டினி கிடக்கக் கூடாது. விரதத்தைக்கூட நான் ஒரு பிடிவாதம் என்றே சொல்வேன். அது மனக் கட்டுப்பாட்டுக்காகத் திணிக்கப்பட்ட விஷயம். இயல்பான உணவு நெறி முறையாளர்களுக்கு விரதங்கள் தேவையில்லை.

எனது உணவில் பால் சேர்த்துக் கொள்வதில்லை. பால் செரிமான சக்தியைக் குறைத்துவிடும். காலை உணவுடன் தயிர் மட்டும் சேர்த்துக்கொள்வேன். காலை ஒரு காபி; மாலை ஒரு டீ மட்டும்.

கொள்ளுப் பயிறுக் குழம்பு எனக்கு மிகவும் பிடிக்கும். சளியை முறித்து, இரத்த ஓட்டத்தைச் சீராக்கும் பண்பு கொள்ளுக்கு உண்டு.

நம்மில் பலருக்குப் பிடித்தது, பிடிக்காதது என்ற பேதங்கள் மட்டுமே உள்ளன. அது தவறு. இது நல்லது, இது நல்லதன்று என்பதே சரியான அளவுகோல்!



# V.I.P. ஹெல்த்



நம்முடைய உணவுப் பழக்கம் பரிசீலனைக்குரியது. மூன்று வேளை என்பது ஒரு வகையில் உடல் நலத்துக்குக் கேடானது. நாளொன்றுக்குத் தேவையான உணவை ஐந்து வேளைகளாகப் பிரித்து உண்பதே சரி. சீனர்கள் நாளொன்றுக்கு ஐந்து வேளை, ஆறு வேளை உண்பார்கள். காரணம் அதிக அளவு உணவு மனிதனை மந்தமாக்கும்.

மாவுப் பொருட்களைக் குறைக்க வேண்டும். அதிலும் சலித்தெடுத்த மாவுகள் உடல்நலத்தின் சத்ரு. அதேபோல மிகத் தீமையான உணவு என்றால் பரோட்டாதான். அதிகமாக உழைப்பவர்களைக் கூட நேரங்கழித்து எழ வைப்பது பரோட்டாதான். சலித்த மாவு வகைகள் மலச்சிக்கலைத்தான் உண்டாக்கும்.

எனக்குப் பூஜைப் பழக்கவழக்கங்கள் உண்டு. அவ்வப்போது மன அமைதிக்கு சில மந்திர ஜபம் செய்வதுண்டு.

முன்பு வாழ்வின் பகுதி வீடாகவும், வீட்டின் பகுதி பூஜையறையாகவும் இருந்தது.

இப்போது உலகமே பூஜையறையாக, இறை வழிபாட்டுத் தலமாகத் தோன்றுகிறது.

இந்த மலர்ச்சியின் பலன் உடலுக்குள்ளும், மனதுக்குள்ளும் சென்று அனுபவிக்கும் தன்மை விவரிக்க இயலாதது.

'சக்தி பிறக்குது மூச்சினிலே' என்ற பாரதியின் வரிகளை நான் கீழ்க்கண்டவாறுதான் பார்க்கிறேன்.

'பிறருக்காய் வாழும்போது நம் சக்தி கூடும், திறன் மிளிரும்.

தமக்காக வாழ்கின்றபோது சக்தி விரயமாகும், ஒளி மங்கும்.'



ஒளியைத் துலங்க வைப்போம்!

தொகுப்பு : **ஆதித்யா**

## தராசு

● ச.ஆ. கேசவன்,
இனாம் மணியாச்சி

? கல்கி தானும் நம்பர் ஒன் என்ற முயற்சியில் ஈடு படாமல், தரம் - தார்மிகம் எனப் பாதை மாறிச் செல்வதேன்..?

! உல்டா பண்ணாதீங்க! நம்பர் 1 போட்டா போட்டியில் இறங்கியுள்ள பத்திரிகைகள்தாம் தரக் குறைவான குறுக்கு வழிகளில் மாறிச் சென்றுள்ளன. கல்கி அன்றும் இன்றும் என்றும் செல்வது தேசநலன் என்னும் ராஜபாட்டையில் தான்.

● என். கோதண்டராமன், மதுராந்தகம்

? "அஃப்சலுக்கு மரண தண்டனை விதித்தால் நாடே பற்றி எரியும்" என்று ஃபாருக் அப்துல்லா கூறியிருக்கிறாரே...?

! பொறுப்பற்ற, தேச விரோதப் பேச்சு. வோட்டு வங்கியைக் கருத்தில்கொண்டு கூறப்பட்ட சுயநலச் சொற்கள். பயங்கரவாதிகளுக்குப் புதுத் துணிச்சல் அளிக்கும்; ஹிந்து - முஸ்லிம் பிளவை அகலப்படுத்தும்!

# பாகிஸ்தானைப் அறிவித்தால்

● கு.கணேசன், பனங்கோட்டூர்

? "சென்னை மாநகராட்சித் தேர்தலில் கள்ள வோட்டுப் போடப்பட்டதாக ஒரு புகார்கூட வரவில்லை" என்று போலீஸ் கமிஷனர் பெருமிதப்பட்டுக் கொள்கிறாரே?

! பல வோட்டுச் சாவடிகளில், பதிவான வாக்குகளை விடவும் பெட்டியிலிருந்து எடுத்து எண்ணப்பட்ட வாக்குகள் அதிகமாக உள்ளதை, புள்ளி விவரங்களுடன் பத்திரிகைகள் எடுத்துக்காட்டியுள்ள நிலையில், கமிஷனரின் இந்தப் பெருமிதம் போலித்தனமானது. ஆனால், ஹ்யூண்டாய் நிறுவனம் அன்பளிப்பாக வழங்கிய நூறு கார்களையும் உதயசூரியன் வடிவில் நிற்க வைத்து முதல்வரிடம் காட்டி மகிழ்வித்த காவல் துறையிடம் வேறு என்ன நாம் எதிர்பார்க்க முடியும்?

● ஜெ.ஜெயராணி, பகமலை

? 'பர்தா அணிந்தால் வேலை கிடையாது' என்ற புதிய சர்ச்சை பிரிட்டனில் கிளம்பியிருப்பதைப் பற்றி...?

! அக்டோபர் 25, புதன்கிழமை ஹிந்து நாளிதழில் பக்கம் 13-ல் ஸய்பா மாலிக் எழுதியுள்ள கட்டுரையைப் படித்துப் பார்க்கவும்.

● லெ.நா.சிவகுமார், சென்னை-33

? 'இலங்கைத் தமிழர் பிரச்னையைப் பற்றிப் பேச, கருணாநிதி தலைமையில் அனைத்துக் கட்சிக் குழுவினர் டெல்லி செல்ல வேண்டும்' என்



* டெல்லி திட்டம்!

* அச்சுறுத்தும் இலவசங்கள்!



கிறாரே ராமதாஸ்?

! இலங்கை அரசும் எதிர்கட்சியும் கருத்தொருமித்து ஒப்பந்தம் கையெழுத்திட்டுள்ள இவ்வேளையில்; புலிகள் பேச்சுவார்த்தைக்கு முன்வந்துள்ள கட்டத்தில், தமிழகத் தலைவர்கள் நடப்

# போக்கிரி நாடாக என்ன...?

பதைக் கவனித்து, அடக்கி வாசிப்பதே நல்லது.

● அனன்யா, பெங்களூர் - 40

? எதிர்பார்த்து ஏமாந்து போவது சரியான முட்டாள் தனம்தானே...? (கல்கியில் வாரா வாரம் என் ஜோக் வர வேண்டும் என எதிர்பார்ப்பதைச் சொல்கிறேன்.)

! அப்படிப் பார்த்தால் ஏமாற்றம் எங்களுக்கும்தான் - ஒவ்வொரு வாரமும் அனன்யா நல்ல ஜோக்காக எழுதி அனுப்புவார் என்று எதிர்பார்ப்பதால்!

● கே.விஸ்வநாத், பெங்களூர் - 38

? மாநிலத்தில் ஒரு பிரச்னை என்றால் அனைத்துக் கட்சிகளும் ஒன்று சேர்வது என்பது தமிழகத்தில் மட்டும் நிகழ்வதில்லையே?

! நிகழ்ந்திருக்கே! முல்லைப் பெரியார் பிரச்னையப் பத்தி கேரள அரசோடு பேச உச்ச நீதிமன்றம் ஆர்டர் போட்ட பிறகு, அ.தி.மு.க. உள்ளிட்ட அனைத்துக் கட்சிகளும் கேரளாவோடு எப்படிப் பேசறது, என்ன பேசறதுன்னு கூடி விவாதிச்சிருக்காங்களே!

● டி.முருகேசன், திருவாரூர்

? 'பகுஜன் சமாஜ் கட்சி மத்தியில் ஆட்சியைக் கைப்பற்றும் வரை நானும் என்னுடைய கட்சித் தொண்டர்களும் புத்த மதத்தைத் தழுவ மாட்டோம்' என்கிறாரே மாயாவதி!

! புத்த மதத்துக்கு நஷ்டமில்லை; லாபம்தான்!

● எஸ்.மீனாக்ஷி, டோம்பிவிலி

? 'மன்னிப்பு அளிப்பது சாதி - மத - அரசியல்

● சாதுப் பிள்ளை



* 'சூரிய' மகிழ்ச்சி!

விஷயங்களுக்கு அப்பாற்பட்டதாக இருக்க வேண்டும்' என உச்சநீதிமன்றம் தெரிவித்துள்ளதைப் பற்றி...?

! காலத்தில் கூறப்பட்ட நியாயமான கருத்து. உச்சநீதிமன்றத்தின் தீர்ப்புகளைத் துச்சமாகக் கருதும் போக்கு, சுயநல வோட்டு வங்கி அரசியலில் அதிகரித்து வருகிறது.

● அகிலா அன்புமணி, ஈரோடு ❒

? உள்ளாட்சித் தேர்தலில் சென்னையிலும் மதுரையிலும் நடந்த கலவரங்களின் காரணமாக தி.மு.க. கூட்டணி தமிழகத்தின் மற்ற பகுதிகளில் இதே தேர்தலில் பெற்றுள்ள வெற்றியையும் சந்தேகக் கண்கொண்டு பார்க்கிற நிலைமை ஆகிவிட்டதே?



* பிழைத்தது பௌத்தம்!

! வெட்கக்கேடு என்னவென்றால், வன்முறை, மோசடி இல்லாமலேயே தி.மு.க. கூட்டணி சென்னையிலும் மதுரையிலும் பெரு வெற்றி பெற்றிருக்க முடியும் என்பதுதான். பாலில் கலந்த இரண்டு சொட்டு விஷமாகிவிட்டது. பரிதாபம்!

● ஜி.ஜெயராமன், கூந்தலூர்

? தமிழக அரசின் நிதி நிலைமை திருப்திகரமாக உள்ளதா...?

! அப்படித்தான் முதல்வர் நம்பிக்கையோடு சொல்கிறார். இலவச வினியோகங்களால் ஏற்பட்டுள்ள, ஏற்படப் போகிற பற்றாக்குறையை ஈடுகட்ட புதுப் புது வரிகள் விதிக்கும்போது, நமக்குத் தேள் கொட்டினாற் போல் இருக்கும்!

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை - 12

? பாகிஸ்தானுடனான உறவை, இந்தியா மறுபரிசீலனை செய்ய வேண்டும் என்றும், பாகிஸ்தானைப் போக்கிரி நாடாக அறிவிக்க வேண்டும் என்றும் பா.ஜ.க. தலைவர் ராஜ்நாத்சிங் கருத்து தெரிவித்துள்ளதைக் குறித்து...?

! போக்கிரியிலும் கஜபோக்கிரி முஷாரஃப். ஆனால், உலகத்தின் சட்டாம்பிள்ளையாக அமெரிக்கா நடந்துகொள்ளும் வரை, பாகிஸ்தானைப் 'போக்கிரி நாடாக' உலக நாடுகள் அறிவிக்காது. காரணம், அமெரிக்காவிடம் சாதுப் பிள்ளையாக முஷாரஃப் கைகட்டி நின்று, நல்ல பெயரெடுத்துவிடுவதுதான்.

● எஸ்.காயத்ரி, திருக்குறுங்குடி ★

? பாமர இந்தியர்களிடம் படித்திருக்கும் சில அப்பாவித்தனமான அபிப்ராயங்களை மாற்ற முடியவில்லையே?

! அனைவருக்கும் கல்வி பரவலானால் அது மூட நம்பிக்கைகளை ஒழிக்கும் என்று பார்த்தால், இங்கே படிச்சுப் பட்டம் பெற்று வருவோர் கூட பகுத்தறிவு இழந்து செயல்படுறாங்க! நம்ம கல்வியோட தரம் அப்படி இருக்கு! ○

❒ ரூ.100/- பரிசு பெறுபவர்:
அகிலா அன்புமணி,
5, சொக்கநாத வீதி,
அம்மன் காம்ப்ளக்ஸ்,
ஈரோடு - 638 001

★ ரூ.50/- பரிசு பெறுபவர்:
எஸ்.காயத்ரி,
44/16A, வடக்கு மாடவீதி,
திருக்குறுங்குடி -627 115

# வட்டமேஜை



✉ ஜாலி போட்டியா வச்சீங்க! பார்த்துப் பார்த்து கண் நோவும், புரட்டிப் புரட்டி கைநோவும் கண்டதுதான் பலன்! இது புதுவகை ஜாலிகுன்குன்யா!
**சென்னை -24, எம்.சேக் அப்துல்லா**

✉ ஆட்டோ கேடில் வரைந்த புதிய வரைபட வீட்டில் அறைகள், வசதிகள் நிரம்ப இருந்தன. புத்தம் புதிய வீட்டுக்கு எங்களது வாழ்த்துகள்.
**விழுப்புரம், கே.ஏ.முகமது அலி**

✉ நக்கீரன் கோபாலின் ஹெல்த் டிப்ஸைப் பின்பற்றினால், ஆஸ்பத்திரிக்கு ஆகும் வீண் செலவுகள் குறையும்.
**பாளையங்கோட்டை, பி. சிவா**

✉ நம் நாட்டின் கலாசாரம் புடைவை, வேஷ்டியில்தான் உள்ளது. எந்த நாகரிகத்தாலும் இதனை மாற்ற முடியாது.
**மும்பை, உமரி பொ.கணேசன்,**

✉ கல்கியில் வெளியான ஜோக்குகளையெல்லாம் தூக்கிச் சாப்பிட்டு விட்டது திருமாவின் ஆட்டோகிராஃப்.
**திருச்சி, இ.முகம்மது உசேன்**

✉ என்னைப் போன்ற வயதானவர்களுக்கு மட்டுமல்ல... எல்லோருக்குமே சுஜாதாவின் 'வாரம் ஒரு பாசுரம்' ஒரு வரம்!
**பெங்களூர், என்.கே.ஈஸ்வரி,**

✉ கு.ஞானசம்பந்தனின் 'சினிமாவுக்குப் போகலாம் வாங்க' அதற்குள் முடிந்து விட்டதே! நாற்பது வாரங்கள் ஓடியதே தெரியவில்லை. தமக்கே உரிய நகைச்சுவைப் பாணியில் அளித்தது இனிமை.
**சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்**

✉ சினிமா மணி, முத்துராக்கு ஆகியோர் குழுவில் கல்கி மூலம் அமைதியாக சுற்றி வந்தேன். சினிமா - இன்று வளர்ச்சி அடைந்திருக்கலாம். ஆனால் மக்கள் மனதில் அது சுரங்கம்! அந்தச் சுரங்கத்தில் இறங்க எவ்வளவு கடினம் என்பதை கு.ஞான சம்பந்தன் விளக்கினார்.
**கோலார் தங்கவயல், மு.ரா.பாலாஜி**

✉ இனியவை நாற்பது போல், குஞான சம்பந்தனின் 'என்றென்றும் அன்போடு' நாற்பதும் இனித்தன; இனிய நினைவுகளில் மூழ்க வைத்தன. ஒரு நல்ல திரைப் படத்தை கண்டு மகிழ்ந்த இனிய உணர்வு!
**திருவண்ணாமலை, என்.சண்முகம்**

## ஜாலிகுன்குன்யா!





## ஜாலியா கண்டுபிடிங்க!

# பரிசு ரூ. 2000



தீபாவளிக்கு ரிலீஸான சில தமிழ்ப் படங்களின் கதாநாயகர்கள்தான் பக்கத்தில் நீங்கள் பார்ப்பது. இவர்கள் நடித்த அந்தப் படங்களின் பெயர்கள் என்னென்ன என்று எழுதி, அதோடு கூட கல்கி பற்றி நச்சென்று இரண்டு வார்த்தைகள் எழுதி அனுப்புங்கள். இரண்டாயிரம் ரூபாயைப் பரிசாக வெல்லுங்கள்! நிறைய பேர் சரியான விடை எழுதினால் குலுக்கல் மூலமும் 'நச்' வாசக அடிப்படையிலும் எட்டுப் பேர் தேர்ந்தெடுக்கப்பட்டு பரிசு பகிர்ந்தளிக்கப்படும்.

முடிவு தேதி: 6.11.2006

ரெடியா?



Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.